# எது புதுக் கவிதை?

முனைவர் பெ. சுபாசு சந்திரபோசு
எம். ஏ. (தமிழ்) எம். ஏ. (இதழியல் & மக்கள் தொடர்பியல்)
எம்.ஃபில்., பி. எச் டி. பி. ஜி. டி. ஜே.

சுபாலிகா பதிப்பகம்
4, வங்கியர் குடியிருப்பு
குமரன் நகர், திருச்சிராப்பள்ளி - 620 017

# எது புதுக்கவிதை?
(திறனாய்வு நூல்)

முனைவர் பெ. சுபாசு சந்திரபோசு
தமிழ்ப் பேராசிரியர், பிசப். ஈபர் கல்லூரி
திருச்சிராப்பள்ளி - 620 017.



○

வெளியீடு
சுபாஷிகா
திருச்சிராப்பள்ளி - 620 017

☎ 770184

○

முதற் பதிப்பு : ஏப்ரல், 1997

○

அச்சும் அமைப்பும் :
ஆரோக்கியம் அச்சகம்
உறையூர், திருச்சிராப்பள்ளி - 620 003

○

விலை ரூ 30-00

# கவிதைப் பக்கங்களோடு

# பேசும் முன்......!

தமிழ் இலக்கிய வரலாற்றில் புதுக்கவிதை என்பது ஒரு புதிய அடையாளம். இந்த அடையாளத்தை எனக்குள் ஏற் படுத்திய முதல் மூவர் மீரா, அப்துல் ரகுமான், சிற்பி.

நான் கல்லூரியில் முதுகலை மாணவனாக இருந்த காலத்திலிருந்து (1972) இன்றுவரை கவிதைமீது எனக் கொரு ஆசை. அந்த ஆசைதான் என்னைத் தமிழ்ப் படிக்க வைத்தது. பிறகு அந்த ஆசை. புதுக்கவிதைக் குள்ளும் பரவியது. புதுக்கவிதைகளை வாசித்தும், நேசித்தும், சுவாசித்தும் வருகிறேன். என் பேச்சிலும் எழுத்திலும் புதுக்கவிதைகளின் வீச்சு எப்போதும் தலை நீட்டும்.........எது புதுக்கவிதை? என்ற கேள்விக்குப் பதிலாகப் பத்துக் கட்டுரைகளைச் சொல்லியிருக்கிறேன். இந்த நூலின் நோக்கு இரண்டு. ஒன்று புதுக்கவிதையின் படைப்பு முறைகள்; இரண்டு புதுக்கவிதையின் சமுதாய நோக்கு. இந்த இரண்டு நோக்கு நிலைகளில் இந்த நூலை எழுதியிருக்கிறேன். இந்த நூலில் வந்துள்ள படைப்பு முறைகள் என்பது நானும், கவிஞர் பாலாவும் திருச்சி, சீதா லெட்மி இராமசாமிக் கல்லூரி மாணவிகளுக்குக் கவிதைப் பட்டறை நடத்தியபோது உருவானது.

பிற கட்டுரைகள் 1978 முதல் 1997 வரை இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் கருத்தரங்கில் அரங்கேறிய கட்டுரைகளின் மறுவடிவங்கள், கதைக் கவிதை. நாட்டுப்புற பாங்கு ஆகிய இரண்டும் இந்த நூலுக்காக எழுதியவை.

இதில் புதுக்கவிதையின் முழுமையைத் தேடச் சில 'மாதிரிகளை' மட்டும் சொல்லியுள்ளேன். இன்னும் நீங்கள்

நிறையத் தேடலாம், சொல்லலாம். — எனக்குள் ஏற்பட்ட புரிதல்களைச் சொல்லியுள்ளேன் . ...கவிதைகளைப் படிக்கும் போது உங்களுக்கும்கூட இன்னொரு புரிதல் எழலாம்.... ... அது எனக்கும் . . உங்களுக்குமுள்ள அர்த்த மீட்பின் வேறுபாடு...... நானும், நீங்களும் சமூகம், வாழ்க்கை, இலக்கியம் முதலான தளங்களில் சமமாக இல்லை. அதனால் அர்த்த மீட்பு வித்தியாசப்படுவதும் ஒரு நியாயந் தான்...... இந்த நூலைக் கல்லூரி மாணவர்களுக்கும், ஆய்வாளர்களுக்கும், கவிதையின் நேயர்களுக்கும் முன் வைத்துள்ளேன்.

புதுக்கவிதை வானத்தில் ஒரு நிலவாக, இருட்டை வெளிச்சமாக்கக் கவிதைகள் படைத்தவர் கவிஞர் சிற்பி, புதுக்கவிதைக்குள் மண்ணையும் மனிதனையும், மறக்காமல் கவிதை படைக்கும் சிற்பியின் தனிச்சிறப்புக் கதைக் கவிதைப் படைப்புகள். இவர் எழுதியுள்ள 'புதுக்கவிதைக்கு ஒரு கைவிளக்கு' என்னும் மதிப்புரை தமிழ்க்கவிதை இலக்கியத்தின் குரலாக அமைந்திருப்பது இந்நூலுக்குக் கிடைத்த இன்னொரு சிறப்பு. இச்சிறப்புக்குரிய கவிஞர் சிற்பி அவர்களுக்கு என் நன்றி. தமிழ்க் கவிதையில் கவனிக்கத் தக்கவர் கவிஞர் பாலா. இவர் ஒப்பிலக்கிய ஆய்விலும், திறனாய்விலும், கவிதைப் படைப்பிலும், மொழி பெயர்ப்பிலும் குறிப்பிடத்தக்க சுவடுகள் பதித்துள்ளார். இவர் எழுதியுள்ள 'புதுக் கவிதை முகவரிகள்' இன்றைய ஆய்வுப்போக்கையும், தமிழ்க்கவிதைச் சூழலையும் கூர்மை யாகவும், கனமாகவும், விமர்சித்துள்ளது. இந் நூலுக்குச் சரியான விமர்சன முகவரி எழுதியுள்ள கவிஞர் பாலா அவர்களுக்கு என் அன்பு கலந்த நன்றி. எழுத்துப் பணியில் எனக்கு என்றும் துணை செய்யும் நவீன இலக்கிய விமர்சகர் முனைவர் க. பூரணச்சந்திரன் அவர்களுக்கும், எனது இலக் கிய உணர்வுக்கு என்றும் மெருகூட்டும் திவ்வியப் பிரபந்தச் செல்வர், முனைவர், ம பெ.சீனிவாசன் அவர்களுக்கும் நன்றி.

இந்நூலை எழுதும் காலத்தில் என்னுடன் விடிவெள்ளியாய் இருந்த என் ஆய்வு மாணவர் அருணுக்கும், இளவம முனைவர், கா. வாசுதேவனுக்கும், நூலகர் பத்மநாபனுக்கும் கவிதைப் பயிருக்கு நீர் ஊற்றிய கண்மணிகள் நந்தினி-நர்மதா - நிவேதிதாவுக்கும், அழகிய முறையில் அச்சிட்ட ஆரோக்கியம் அச்சகத்தாருக்கும், நன்றிகூறி மகிழ்கிறேன்.

இந்நூல் எழுதத் துணைசெய்த களங்களுக்கும்-கவிஞர்களுக்கும் நெஞ்சம் நிறைந்த நன்றி சொல்வது என் கடமை.

இந்த நூலின் ஒரு சொல்லாவது உங்களுக்குப் பயன் பட்டிருந்தால் அதுவே எனக்குக் கிடைத்த வெற்றி. இந்தக் கவிதைப் பக்கங்களோடு பேசுங்கள்.........எனக்கும் எழுதுங்கள்.

5—4—'97 — சுபாசு.

# புதுக்கவிதைக்கு ஒரு கை விளக்கு

**கவிஞர் சிற்பி -**

திறனாய்வுக் கலை தமிழ் இலக்கியத்தில் வலுவாகக் காலூன்றிக் கொண்டிருக்கிற காலம் இது. 'ரசனை முறைத்' திறனாய்வு விடைபெற்றுப் போய்விட்டது. இன்று அமைப்பியலும், பின் அமைப்பியலும், கட்டவிழ்ப்புமாகத் திறனாய்வு வேகப் பாய்ச்சல் கொண்டிருக்கின்றது.

இத்திறனாய்வுகளெல்லாம் அடிப்படையில் இரண்டு துறைகளிலேயே கால் கொண்டன. ஒன்று நாட்டுப்புற வியல்; மற்றொன்று புதுக்கவிதை, இ. மறைமலை, அப்துல் ரகுமான், பாலா, தமிழவன், தி. சு. நடராசன் என விரிகிறது புதுக்கவிதைத் திறனாய்வாளர் வரிசை. மொழியியல் நோக்கில் செ. வை. சண்முகம், அகத்தியலிங்கம் ஆகியோர் ஆழமான பங்களிப்பைச் செய்து வருகின்றனர்.

பேராசிரியரும், இனிய நண்பருமான முனைவர் சுபாசு சந்திரபோசு புதுக்கவிதையை அணுகும்முறை இவர்களிலிருந்து வேறுபட்டது.புதுக்கவிதையை வகுத்தும், பகுத்தும் வரையறை செய்வதுடன் - பொருண்மை அடிப்படையில் அதன் போக்குகளை அறிமுகம் செய்வதும் சுபாசு நூலின் நோக்கம் எனலாம்.

நுவல் முறை :

பதினொரு இயல்களாக அமைந்துள்ள இந்நூல் ஆய்வுச் சுமையாக வாசகனை அழுத்தாமல் மயிலிறகு போல் மென்மையாய் மனதை வருடுகிறது. இளைய நெஞ்சங்களுக்கு ஏற்ற சுவையோடும், இனிமையோடும் நூலாசிரியரின் எழுத்து இயங்கியிருக்கிறது.

எது புதுக்கவிதை என்ற வினாவுடன் நூல் தொடங்கு கிறது. இந்தக் கேள்விக்கு விடை காண்பது வைக்கோல் குவியலில் ஊசியைத் தேடுகிற செயல். ஏராளமான விளக்கங்களோடு போராடிய பின், 'கருத்துக்கும் உணர்வுக்கும் ஏற்ப எண்ண அலகின் அடிப்படையில் வடிவம் பெறுகிறது' என்று முடிக்கிறார். கவிதைக்குக் கருத்து இன்றியமையாதது தானா என்று வினா எழுப்புவோர் உண்டு. எனவே இந்த விளக்கமும் ஊசியைக் கண்டெடுத்ததா என்ற வினா வரத்தான் செய்யும், ஆயினும் எங்கேயாவது தேடல் ஓய்வெடுத்துத்தானே தீரவேண்டும்.

புதுக்கவிதையின் படைப்பு முறைகளைக் கோடிட்டுக் காட்டுகிற ஆசிரியர் உவமை முதல் காட்சிப் படுத்தல் வரை வலையை வீசி இருக்கிறார். சில தங்க மீன்களும் இவர் வீசிய வலையில் சிக்கி இருக்கின்றன. இங்கிருந்து நூலின் பல இயல்கள் உருவாகியிருக்கின்றன.

**பசுவய்யாவின் படிமம்:**

படிமம் என்ற கருத்தாக்கத்தை விளக்கியுள்ள ஆசிரியரின் திறம் பாராட்டுக் குரியது. குறிப்பாகக் கவிஞர் பசுவய்யாவின் இயற்கைப் படிமங்களை - காற்று, கடல், வானம், மரங்கள் ஆகியவற்றை ஆசிரியர் எடுத்துப் பேசுகின்றார். படிமம் – குறியீடு இரண்டையும் ஒன்றென உணரும் மயக்கம் பற்றித் தொடக்கத்தில் சொல்லியிருப்பவை சரியானவை. ஆயினும் அவர் தந்துள்ள எடுத்துக் காட்டுக்களில் குறியீடு குடியிருப்பதை அவராலேயே தவிர்க்க முடியவில்லை. (ப: 23) அதனால் இரவும் பகலும் போல் இவை தனித்தே இருப்பதாய்க் கருதினாலும், அந்தி மயக்கங்களை அகற்ற முடியவில்லை.

இயற்கைப் படிமங்களில் ஆழ்ந்திருக்கும் சிந்தனை, தேடல், இயற்கை விசுவரூபம், கனவு, மனிதப் பண்பு

ஆன்ம நேயம் ஆகியவற்றையெல்லாம் ஆசிரியர் அடையாளம் கண்டு புதிய சாளரங்களைத் திறந்து வைத்திருக்கிறார்.

தொன்மக் குறியீடு :

இந்திய, விவிலியத் தொன்மக் கூறுகள் புதுக்கவிதையில் விரவிக்கிடப்பதை ஒருகட்டுரை ஆராய்கிறது. புதுக்கவிதையின் மிகச்சிறந்த கூறுகளில் ஒன்று இது. புதுப்பொருள் காண இக்கூறு பயன்படுவதை ஏராளமான சான்றுகள் வழி நிறுவிக் காட்டுகிறார். ஆசிரியர் சுபாசு புதுக்கவிதைப் படைப்புகளில் கொண்டிருக்கும் ஆழ்ந்த பயிற்சி இதனால் தெளிவாகிறது. இந்த இயலை விரிவு படுத்தி ஒரு தனி நூலையே எழுத வாய்ப்புண்டு.

பிற கூறுகள் :

உவமைகள் சமகாலச் சிக்கல்களை உள்ளடக்கியிருப்பதையும், விமர்சன நோக்கம் கொண்டிருப்பதையும் சுட்டிக் காட்டுகின்றார். அதைவிடவும் அங்கதம் புதுக்கவிதையின் நிழலாகத் தொடர்வதைக் கூர்மையாகச் சொல்லியிருப்பது குறிப்பிடத் தக்கது.

பெண்ணுரிமைக்குப் புதுக்கவிதைகள் குரல் கொடுப்பதை மூன்று கவிஞர்களின் கவிதைகளை எடுத்துக்காட்டி உரைக்கின்றார். காலத்தின் குரல் கவிதையென்பதை இதனால் விளக்குகின்றார். மிக விரிவான இடத்தை சமுதாயப் பார்வை என்னும் கட்டுரை எடுத்துக்கொள்கிறது. சுதந்தரம், பசிக்கொடுமை, அரசியல், கல்வி குறித்தெல்லாம் பன்முகமாகப் புதுக்கவிதை பேசுவதை எடுத்துக் காட்டிய ஆசிரியர் சூழல்கேட்டை ஒரு முக்கிய பொருளாகப் புதுக்கவிதையாளர் கையாண்டிருப்பதை அழுத்தமாகக் குறித்துள்ள முறை வரவேற்புக்குரியது.

புதுக்கவிதையில் அறிவியல் பார்வை சிறந்திருப்பதையும் ஆசிரியர் கவனிக்கத் தவறவில்லை. இங்கு

ஷெல்லியின் மேகம் பற்றிய கவிதையை ஆசிரியரே மொழி பெயர்த்துத் தந்திருக்கிறார். மொழிபெயர்ப்பு அருமையாக வந்துள்ளது. ஆசிரியரின் கைவண்ணத்தைக காணும் போது ஒரு நல்ல மொழிபெயர்ப்பாளராக இவரைக்காண எனக்கு ஆவல் மேலிடுகிறது.

நாட்டுப்புறப் பாங்கு :

புதுக்கவிதையில் நாட்டுப்புற இலக்கியத் தாக்கம் இருப்பதை அறிஞர் பலரும் சுட்டியுள்ளனர். கதைப் பாங்கு, பாடல் ஓசை, உரையாடல் தொனி, தாலாட்டு-ஒப்பாரிப்பாணி என்பனவெல்லாம் புதுக்கவிதையாளர்களால் உத்திகளாக உருமாற்றப்பட்டிருப்பதை ஆசிரியர் இனம்கண்டு கூறியுள்ளார்.

கதைக் கவிதை :

புதுக்கவிதையில் கதைசொல்லும் வகைமை ஓரளவு வளர்ச்சிபெற்றுள்ளது. பிச்சமூர்த்தி, மீரா, சிற்பி, முருகு சுந்தரம் ஆகிய கவிஞர்கள் படைப்புகளிலிருந்து பயன் தரும் எடுத்துக்காட்டுகள் தரப்பட்டுள்ளன. இவர் கருத்துக்களை மையமாக்கி ஆய்வேடுகள் உருவாக வாய்ப்பு உண்டு.

அழகும் எளிமையும் :

பேராசிரியர் சுபாசுவின் நடையில் அழகும் எளிமையும் கொஞ்சுகின்றன. நிரடல் இல்லாத ஓட்டம், நூல் முழுதும் அணி செய்கிறது.

ஒவ்வொரு இயலுக்கும் ஒரு கவிதை தொடக்கமாக அமைக்கப்பட்டிருப்பது பூச்சூட்டினாற்போல் அழகு தருகின்றது,

தமிழ் இலக்கியத்தை இன்று ஆட்கொண்டிருக்கும் புதுக்கவிதை பற்றிக் காலத்துக்குத் தேவையான, கச்சிதமான அறிமுகம் இந்நூல்.

புதுக்கவிதையைப் புரிந்து கொள்ள ஒரு கை விளக்காக வும், ஆழ்ந்துணர வழி காட்டியாகவும், நுகர்ந்து இன்புற ஒரு தோழமையாகவும் சுபாசுவின் நூல் பயன் தரும்.

இலக்கிய மாணவர்களுக்கு இலக்கியச் செந்நெறி பயிற்றுவிக்கும் நல்லாசானாக விளங்கும் பேராசிரியர் தம் நூலையும் அவ்வகையில் ஒரு புதுக் கவிதைப் பேராசிரிய மாக உருவாக்கித் தந்துள்ளார். பாராட்டுப் பூச்செண்டு வழங்கி மகிழ்கிறேன்.

முனைவர்,

சிற்பி, பால சுப்பிரமணியம்
தமிழ்த்துறைத் தலைவர்
பாரதியார் பல்கலைக்கழகம்.

கோயம்புத்தூர்
24—4—97

# புதுக்கவிதை முகவரிகள்

—( பாலா )—



நவீனத் தமிழ் இலக்கியம் நாளும் உரமும், வளமும் பெற்று வளர்ந்துவருகிறது. புதினம் மற்றும் புதுக்கவிதைத் துறையில் இவ்வளர்ச்சி மிகவும் கவனம் கொள்ளத்தக்க பேரளவினதாக அமைந்திருக்கிறது. எனினும், புது முயற்சிகள் பதிவு செய்யப்பெற்று அடையாளம் காட்டப்படுதல் வேண்டும். இல்லையெனில் விளம்பர வாய்ப்புப்பெற்றோரே இக்கால எழுத்தாளர் என்று தவறாகக் கணிக்கப்படும் ஆபத்து உண்டாகிவிடும். இதனை யார் சாதிப்பது? சிற்றிதழ்கள், ஆய்வாளர்கள், இலக்கிய நிறுவனங்களின் வெளியீடுகள் இவற்றில் முனைப்புக் காட்ட வேண்டும். தமிழ்க் களத்தில் இம்முயற்சிகள் அருகிக் கிடக்கின்றன. தொலைக் காட்சிகளால் வர்ணப் பெருமை பெற்றோரே எழுத்தாளர் என்ற பெறுமதியைப் பெறலாகும் எனக்காலத்தின் கோலம் இருக்கிறது.

பல்கலைக் கழகங்களில், தமிழ் இலக்கிய வட்டாரங்களில் 'surveys' எனப்படும் வகை, தொகையிடல் முயற்சிகள்கூட நடைபெறவில்லை. ஒருசில தனிமுயற்சிகளே தமிழிலக்கியத்தின் வரலாற்றுத் தரவுகளைப் பத்திரப் படுத்தி வருகின்றன.

தற்காலத் தமிழ்க் கவிதைகள் பற்றிய விமர்சன நூல்கள் குறிப்பிடத்தக்க அளவினதாக வெளிவரவில்லை. பாரதிதாசன், சுத்தானந்த பாரதி, நாமக்கல் கவிஞர், முடியரசன், தமிழ் ஒளி, மு. கருணாநிதி ஆகிய கவிஞர்கள் பற்றிய முழுமையான மதிப்பீட்டு நூல்கள்கூட வெளிவரவில்லை. வெறுமையை மகிழ்ச்சியாக அரவணைத்துக் கிடக்கும் படைப்பு வறட்சி தமிழ்ச் சூழலைப் பீடித்திருக்கிறது. புதுக்கவிதை பற்றிய தகவல்கள் ஓரளவிற்கு நிறைவு தருவன.

வல்லிக்கண்ணனின் 'புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும்', பாலாவின் புதுக்கவிதை, ஒரு புதுப்பார்வை இரண்டும் சிறப்பான முதன்மையுரைகளாக இருந்து இளங் கவிஞர்களுக்கும், ஆய்வாளர்களுக்கும் வழித்துணையாகி யுள்ளன. இவர்களின் முயற்சிகள் தொடரப்படவேண்டும். தமிழ் நாடனின் 'ஒருவானம்பாடியின் இலக்கிய வானம்' என்பது போன்ற தனியுரைகளும், மீராவின் எதிர்காலத் தமிழ்க் கவிதை போன்ற பொது உரைகளும் புதுக்கவிதை வெள்ளத்தைக் கரையில் நின்று பார்க்கும் மகிழ்ச்சி தந்தன. இவை போன்ற நூல்கள் தொடரவேண்டும்.

இதற்குத் திறம்வாய்ந்த பார்வைப்புலமும், தொடர்ந்து கவிதை மாற்றங்களைப் பின்தொடர்ந்து கண்டுணர்ந்த வர லாற்று நிலைப்பார்வையும் தேவை. இத்தகைய புலமை நலம் இல்லாதோர், 'வைரமுத்து, வாலி, அப்துல் ரகுமான் ஆகியோரே தமிழ்க் கவிஞர்' என்று தலைகீழாகக் கால முறைமைகூடத் தெரியாது புரிந்துகொள்ளும் பாமரப் பார்வையினராகவே இருப்பர். இத்தகைய கால களச் சூழலில் கவிஞரும், நவீன இலக்கியம் பற்றிக் கற்றுணரும் வாய்ப்பும், திறமும் பெற்ற சுபாசு அவர்கள் புதுக்கவிதை கள் பற்றிய கட்டுரைத் திரட்டு ஒன்றை வெளியிட்டுள்ளதை நான் வரவேற்றுப் பாராட்டுகின்றேன்.

பேராசிரியர் சுபாசு சந்திரபோசு தமிழ்க்கவிஞர். பாரதி தாசன்பற்றிச் சிறப்பானதொரு நூலினை எழுதி வெளி யிட்டுள்ள விமர்சகர், தமிழ்ப் பேராசிரியராகவும், ஆய்வு வழிகாட்டியாகவும் இருப்பவர், சங்கமம் என்ற இலக்கியக் களம் வழியாகத் திருச்சியில் இலக்கியக் கருத்தாடல் களுக்குக் களம் கண்டவர். உற்சாகமாக இயங்கி வருபவர். அவர் பல நேரங்களில் தனித்தனியாகப் புதுக்கவிதைபற்றி எழுதியுள்ள கட்டுரைகளின் தொகுப்பாக இந்நூல் வெளி வருகிறது,

இந்நூலில் பதினொரு கட்டுரைகள் இடம்பெற்று உள்ளன. எல்லாம் புதுக்கவிதைகள் பற்றியன. புதுக் கவிதையின் அடிக்கருத்துக்கள்பற்றியும் வடிவக்கட்டுபற்றி யும் இந்நூல் விளக்க முற்படுகின்றது. எனினும் கவிதையை ஒரு வடிவ நிலைப்பாடாகவே நூலாசிரியர் காண்கிறார். •எது புதுக்கவிதை ?' என்ற முதற் கட்டுரையிலேயே இக் கருத்து வெளிப்பட்டு விடுகிறது. ''சொற்புதிது பொருள் புதிது'' என்ற பாரதி வாக்கியத்தைக் காட்டி முன்னேறும் அக்கட்டுரை மீறல்கள்பற்றியும் 'சோதனை' முயற்சிகள் பற்றியும் நெடுகப்பேசி, ''நிறுவன எதிர்ப்புத் தன்மை நவீனத்தன்மை, பேச்சுக்கவிதை, செயல்பாட்டு நடப்புக் கவிதை''போன்ற கூறுபாடுகளில், கவிதையின் அடையாளம் தெரிவதாக முன்னுரை வழங்கி நிறைகிறது. இதனை மேலும் விளக்குவதாக அமைகிறது. இரண்டாவது கட்டுரை ''புதுக்கவிதையின் படைப்பு முறைகள்''

புதுக்கவிதையை அதன் படைப்பு முறைகளில் அடை யாளம் கண்டுகொள்ளலாம் என்கிறார். (He identifies New Poetry in terms of its 'process' rather than by the end 'product') வேறு சொற்களில் சொல்வதெனில். கவிஞர் கையாளும் உத்தி முறைகளில்தான் கவிதையின் புதுமைத்தன்மை (சோதிமிகு நவ கவிதைக் குணம்) வழிவ தாக நூலாசிரியர் குறிக்கிறார். உவமை, குறியீடு தொன் மம், படிமம், அங்கதம், அறிவியல், இலக்கியம், நாட்டுப் புறவியல் தாக்கம், கதைப் போக்கு, காட்சிப் படுத்தல் முதலிய கூறுகள் கவிஞர்களின் படைப்பு முறைகளாகும்'' என்கிறார் நூலாசிரியர் (பக். 9)

உவமைகள். குறியீடுகள் எல்லாம் கவிதை வரலாற் றில் நெடுநாள் வழக்கத்தில் இருந்து வருவனதானே என்ற ஐயங்களுக்கு விடையளிப்பதுபோல தொகுக்கப் பட்டுள்ளன தொடரும் கட்டுரைகள். அவற்றை வாசிக்கும் கவிதை நேயர்களுக்கு நூலாசிரியரின் எளியசேதி புலப்பட்டு

விடும் உவமை, படிமம், குறியீடு, தொன்மம், அங்கதம் ஆகியவற்றால் வார்த்தைகளைக் 'கவிதைப் படுத்தும்' போதுகவிதைக்குச் சமகாலக் குணமும், புதுமைப் பொலிவும் செறிவூட்டப்பட்டு விடுகின்றது. இதுவே இந்நூலின் சிறப்பான கருத்தாகும். நிகழ் கவிகளின் கவிதைச் சொற்களில் சான்றுகாட்டி இக்கருத்தை நிறுவுகிறார் சுபாசு

பசுவய்யா கவிதைகளைக் காட்டிப் படிமச் சிறப்பைப் பேசுகிறார். (கட்டுரை 3) மீரா, மேத்தா தொட்டு பாலா, தருமு சிவராமு வரை தொன்மங்கள் வழி வெளியிடும் புதுக் கருத்து வெளிச்சத்தில் புதுக்கவிதை புதுமைக் கோலம் தரிப்பதை அடையாளம் காட்டுகிறார். (கட்டுரை 4)

' நீ எனக்குக் காதலைத் தந்தாய் அது உழைப்பாளியின் வியர்வையைப் போல் உயர்வானது ''

''ஃபியூசாகிப்போன
பல்புக்குள்
அறுந்துபோன
சன்ன இழைபோல்
நான் துடியாய் துடிப்பது
தெரியாநா உனக்கு ''

என்பது போன்ற புதுக்காலம் வழங்கும் நவீன உவமைகளால் கவிதை நலம் பெறுவதை ஒரு கட்டுரையில் விவரிக்கிறார். (கட்டுரை 5)

புதுக் கவிதையை மக்கள் செல்வாக்கு நோக்கி நகர்த்திய அங்கதக் குணம்பற்றிக் கட்டுரை 6இல் குறிப்பிடுகிறார். ''தீமைகளைத் திருத்துவதே அங்கதத்தின் முடிந்த முடிவு'' என்று இங்கிலாந்து நாட்டு மீள் செவ்வியற்காலக் கவிஞன்டிரைடன் உரைத்த வாசகங்களைச் சுட்டிக்காட்டி, புதுக்கவிதைகளுக்குள் சமுதாயப் பார்வையை ஏற்றிய அங்கத உத்தியை விளக்கிக் காட்டுகிறார்.
அதில்,

' வணக்கம் என்பார்
வணங்க மாட்டார்
நலம் பார்த்தறியார்
நலமென் றெழுதுவார்
பொதுவான பொய்களில்
பொலிகிறது வாழ்க்கை ''

என்ற என் கவிதை வரிகளை முகப்புரையாக (Epigraph) வழங்கியிருப்பது எனக்கு வியப்புத் தந்தது. தமிழ்ச் சமூகம் பற்றிய என் அங்கதச் சொற்களை, அதிகம் கவனிக்கப் படாத அந்தக் கவிதை வரிகளை சுபாசு எடுத்துரைத் திருப்பது அவருடைய நுட்பமான பார்வையைக் காட்டுகின்றது.

இந்நூலின் சிறந்த கட்டுரை கதைக் கவிதைகள் பற்றிய ஏழாம் கட்டுரை எனலாம். புதுக்கவிதை என்பது ஓர் உலகிய இயக்கம். அதில் நாடுகளின் தனித்துவ குணம் தலை காட்டுவதுண்டு. ஆங்கில அமெரிக்கப் புதுக்கவிதைகளில் உளவியல் சிக்கல்கள் உண்டு. பிரெஞ்சுக் கவிதைகளில் தன்னிரக்கச் சோகம் உண்டு. இதுபோல் தமிழ்ப் புதுக் கவிதைகளில் பழம் தமிழ்க் கவிமரபின் தாக்கம் முனைப் பானதொரு குணம் எனலாம். பிச்சமூர்த்தி, சி. மணி, மீரா, மேத்தா, சிற்பி போன்றோர் கவிதைகளில் இக்குணம் வெளிப்படக் காணலாம்.

காவியச் ' சுமை ' தமிழ்ப் புதுக்கவிகளை வெகுவாக அச்சுறுத்தி வந்துள்ளது. குறுங்காவியம் படைக்க முனைந்த முடியரசன் போன்றோரிடம் இக்குணத்தைக் காணலாம், இதன் விளைவே கதைக் கவிதை, வசனத்தில் தழைக்கும் கதை இலக்கியத்தை கவிதைச் சொற்களுக்குள் கொணர்ந்த முயற்சிதானே காவியம் ஆனது! தமிழ்ப் புதுக்கவிஞர்கள் பலரின் கதை முயற்சிகள்பற்றி சுபாசு பல குறிப்புரைகள இக்கட்டுரையில் வழங்குகிறார். எல்லோரும் நன்கறிந்த

மீரா வரைந்த 'கனவுகள்' பற்றியும், சிற்பி எழுதிய 'மௌன மயக்கங்கள்' பற்றியும் குறிப்பிடுகிறார்.

இக்கட்டுரையில் சி. மணியின் நரகம் பற்றியும், ஞானியின் கல்லிகை பற்றியும், மற்றும் பிச்சமூர்த்தி, மேத்தாவின் கதைக் கவிதைகள் பற்றியும் அவர் குறிப்பிட்டிருக்கலாம். எனினும், கவிஞர் முருகு சுந்தரத்தின் உடைந்த குழல் என்ற அற்புதமான கதைக் கவிதைபற்றி அவர் மறவாமல் குறிப்பிட்டுள்ளது நிறைவளிக்கிறது. கிரேக்க நாட்டு இளைஞன் லியாண்டர் அக்கரையில் தன் காதலியைச் சந்தித்து வருகையில் கடவுளின் சாபத்தில் மூழ்கினான் என்ற கிரேக்க நாட்டுத் தொன்மத்தைக் கவிஞர் தொன்ம மறுஉருவாக்கம்செய்து 'உடைந்த குழல்' கவிதையை வரைந்துள்ளார் என்ற குறிப்புடன் ''உடைந்த குழல்'' பற்றி நூலாசிரியர் விவரித்துள்ளது பாராட்டத் தக்கது.

சமுதாயப் பார்வை, பெண்ணுரிமை போன்ற தலைப்புக்களில் புதுக்கவிதையின் நிகழ்காலத் தன்மையையும், வெளிப்படையான குரலில் பேசும் அரசியல் குரலையும் நூலாசிரியர் அடையாளம் காட்டுகின்றார். புதிய கவிதை புதிய தமிழை நாடி நகர்வதாக உள்ளது என்பதை விளக்கும் வகையில் புதுக்கவிதையில் அறிவியல் என்ற கட்டுரை இந்தத் திரட்டில் இடம் பெற்றுள்ளது.

தருமு சிவராமுவின் கவிதையை முகப்புரையாக வழங்கித் தொடங்கப்பட்டுள்ள இக்கட்டுரையில் கவிஞர் சிற்பியின் குறிப்பிடத்தக்க இரு கவிதைகளான 'நாய்க் குடை', 'காலம் – இரண்டு' பற்றியும் குறித்துள்ளது பாராட்டுக்குரியது.

''எங்கள் பாப்பாக்கள் நீலமாய்ப் பிறக்குமுன்
புல்லிதழில் விஷமுத்துக்கள் வியர்க்குமுன்
செல்வப் பசுமடியில் மரணம் சுரக்குமுன்
அரும்பு உதடு பிரிக்கும் பச்சைமண் முற்றத்தில்

தரிசுக் கோலமிடும்

அணு அபாயம் நிற்கட்டும் '' — என்ற சிற்பியின் குரல் புதிய உலகச் சூழலைத் தமிழ்க் களம் நிமிர்ந்து பார்க்கிறது என்பதை அறிவிப்பது அல்லவா ?

இதுபோன்ற புதுக்கவிதைகள் தமிழ்க் கவிதையினைப் புத்தறிவியல் காலத்திற்கு நகர்த்தியுள்ளது என்ற குறிப்பு கவிதை வரலாற்றில் பதிவு செய்யப்படவேண்டியது அல்லவா ?

பொதுவாக இதில் இடம்பெற்றுள்ள பதினொரு கட்டுரைகளும் சுபாசு சந்திரபோசு அவர்களைப் புதுக்கவிதையின் புதுப்பேச்சாளராக (New Spokesman) அடையாளம் காட்டுகின்றன. இந்நூலினை வாசிக்கும் பேறு பெற்றோர் தமிழின் புதுத்தடங்களை அறிந்துகொள்ள வாய்ப்பு பெற்றவராகிறார். சுபாசு அவர்களின் முயற்சி தமிழ் இலக்கியத்திற்குப் பயன் தரும்வகையில் ஆழமும் அகலமும் பெற்றிட வாழ்த்துகிறேன்.

— பாலா.

மனோன்மணீயம் சுந்தரனார்ப்
பல்கலைக் கழகம்,
திருநெல்வேலி.

(முனைவர்.
இரா. பாலசந்திரன்,
இணைப்பேராசிரியர்,
ஆங்கிலத்துறை.)

## காணிக்கை ...

திண்ணைப் பள்ளிக்கூடத்தில் மட்டும்

படித்துவிட்டு

என்னைப் பள்ளி - கல்லூரிகளில்

படிக்க வைத்தும்

பேராசிரியராகப் பணி செய்யவும்

அவையத்து முந்தியிருக்கச் செய்தும்

வளர்த்தும் - வார்த்தும்

என்னைவிட்டுப் பிரிந்து போனாலும்

என்னுள் என்றும் பிரிக்க முடியாத

என் அப்பாவுக்கு ...

## நன்றி ...

மண்ணையும் மனிதனையும்

விசாலப்படுத்தப் புதிய விலாசங்கள் எழுதிய

கவிஞர்களின் வரிசைகளுக்கு ...

# பொருளடக்கம்

## ஆசிரியரின் பிற நூல்கள்

பாரதிதாசனும் தமிழியமும்

விடியல்

''காற்றைத் திரித்து நகத்தைக் கிழித்து விளக்கேற்றி
ஊனைக் கரைத்து உயிரைப் பிழிந்து எழுத்தாக்கி
நெஞ்சைக் குத்தி விரலைத் தேய்த்துப் படைத்தேன்.

— பசுவய்யா

# 1. எது புதுக்கவிதை?

தமிழிலக்கிய வரலாற்றில் கவிதையின் தோற்றத்தையும் அதன் வடிவப் பரிணாமத்தையும் அறிந்து கொள்வது கவிதையின் நல்ல அடையாளமாகும். சங்க காலத்தில் செய்யுள் ஆசிரியம், விருத்தம், கலி, பரி என்று வரையறுத்த பா வடிவங்களில் செய்யுள்கள் அகத்தையும், புறத்தையும் பாடி அன்றைய சமூகத்தைச் சொல்லிக் கொண்டுள்ளன. அதற்குப் பிறகுவந்த செய்யுள்கள் நீதி இலக்கியமாய், காப்பியமாய், பக்தி இலக்கியமாய் சிற்றிலக்கியமாய் பல வடிவங்களில் வளர்ந்து பாவடிவங்களைப் பெற்று உள்ளன.

இருபதாம் நூற்றாண்டில் பாரதி பாரதிதாசன் ஆகிய இருவரின் வரவு செய்யுள் வடிவத்தைக் கவிதையாக மாற்றியது. பழங்காலச் செய்யுளில் இருந்த நெருக்கமும், செறிவும் இவர்களின் கவிதைகளில் மாறி நெகிழ்ச்சியையும் புதிய வடிவ மரபையும், மரபு மாற்றத்தையும் தோற்றுவித்தன.

பாரதியார் காலத்தில் கவிதை மரபு 'தேச பக்தி' என்ற புதுப்பொருளில் வெளிப்பட்டுள்ளது பாரதியின் செய்யுள் நாடு விடுதலைபெற்றுச் சமுதாய விடுதலையைத் தேடலைப் பாடு பொருளாக்கியுள்ளது. அதனால்தான் பாரதி.

**சொல் புதிது பொருள் புதிது**
**சோதிமிகு நவ கவிதையில்,**
**''ஆயிரங் கிங்குண்டு சாதி - இதில்**
**அந்நியர் வந்து புகல் என்ன நீதி''** என்றும்
**''வந்தே மாதரம் என்போம் எங்கள் மாநிலத்**
**தாயை வணங்குதும் என்போம்.''**

என்றும் பாடியுள்ளார். இன்னும் விரிவாகவும், விளக்கமாகவும் இதைப் பாரதியாரின் கவிதைகளிலும், காட்சிகள் என்ற தலைப்பில் எழுதிய வசன கவிதைகளிலும் பார்க்கலாம். ஒருவகையில் பாரதியார் புதுக்கவிதையின் முன்னோடியாக ஒரு கவிதை வானமாக வந்தவர் என்றால் புதுக்கவிதையென்பது அந்த வானத்தின் இன்னொரு பக்கமாகப் பரிணாமம் பெற்றுள்ளது என்று குறிப்பிடலாம்.

1934-இல் புதுக்கவிதை எழுதத் தொடங்கிய பிச்சமூர்த்தி பாரதியாரின் காட்சிகளும், வால்ட்விட்மனின் வசன கவிதைகளும், புதுக்கவிதை எழுதத் தூண்டியது என்று குறிப்பிட்டு இருக்கிறார். இதற்குப் பிறகு பிச்சமூர்த்தியில் தொடங்கி க. நா. சு., தர்மு சிவராம், சி.மணி, நகுலன், பசுவய்யா, வைத்தீஸ்வரன், ஞானக்கூத்தன் முதலான புதுக்கவிஞர்கள் புதுக்கவிதையில் புதிய சோதனைகளை ஏற்படுத்தினார்கள். இக்கவிதைகள் மணிக்

கொடி, சூறாவளி, கலாமோகினி, எழுத்து, இலக்கிய வட்டம், நடை, கசடதபற முதலிய இதழ்களில் வெளி வந்தன. இதையடுத்து மரபுக் கவிதைகளில் முன்னோடி யாக விளங்கிய அப்துல் ரகுமான், மீரா, நா. காமராசன், தமிழன்பன். சிற்பி, மேத்தா, வைரமுத்து முதலான கவிஞர்களும் புதுக்கவிதையில் நுழைந்து புதுக்கவிதை களின் போக்கில் புதிய எல்லைகளைத் தொட்டு இருக் கிறார்கள். இக்கால கட்டத்தில் தோன்றிய வானம்பாடி யின் வரவும் புதுக்கவிதைகளின் களமாக விளங்கியது.

''எது கவிதை'' அது என்ன செய்ய வேண்டுமென்பதைச் சொல்ல வந்த கவிஞர் அப்துல் ரகுமான்.

எங்கெல்லாம் நன்மை நலிந்து தீமை செழிக்கிறதோ அங்கெல்லாம் கவிதை அவதாரம் கொள்கிறது. எங்கெல் லாம் கௌரவர்கள் அணி திரளுகிறார்களோ அங்கெல்லாம் கவிதை காண்டீபமாகிறது.

எங்கெல்லாம் சீதைகள் சிறைப்படுகிறார்களோ அங் கெல்லாம் கவிதை படையெடுத்துச் செல்கிறது.

எங்கெல்லாம் பாஞ்சாலிகள் துகில் உரியப்படு கின்றதோ அங்கெல்லாம் கவிதை ஆடை வழங்குகிறது.

எங்கெல்லாம் கோவலர்கள் கொலை செய்யப்படு கிறார்களோ அங்கெல்லாம் கவிதை கண்ணில் கனற்பொறி யோடு வழக்காடச் செல்கிறது.

எங்கெல்லாம் பசிக்குரல் எழுகிறதோ அங்கெல்லாம் கவிதை அமுதசுரபியாகிறது என்று 'புரட்சியின் நிறம் பச்சை' என்ற தலைப்பில் எழுதியுள்ளார். அதாவது கவிதை என்பது கொடுமையை எதிர்த்துக் குரல் கொடுக் கும் ஒரு ஆயுதமாகச் செயல்பட வேண்டும் என்கிறார் கவிஞர் ரகுமான். இந்தப் போக்கினைப் புதுக்கவிதை களில் காணலாம்.

புதுக் கவிதையின் வடிவத்தையும் அது மரபுக் கவி-தையிலிருந்து எப்படிச் செயற்பட வேண்டும் என்பதைச் சொல்ல வந்த கவிஞர் வைரமுத்து,

''புதுக்கவிதை எனும் போர்வாள்
இலக்கண உறையிலிருந்து
கவனமாகவே
கழற்றப்பட்டிருக்கிறது''

(திருத்தி எழுதிய தீர்ப்புகள், வைரமுத்து)

என்று கூறுகிறார். ஆனால் புதுக்கவிதையின் படைப்புகளில் மரபுரீதியாகச் சொன்னவைகளும் மறுமொழியப்பட்டுள்ளன. இக்காலச் சமூகச் சிக்கல்களை அதிகம் மையமிட்டுச் சமூக, அரசியல், பொருளாதாரப் பண்பாட்டுக் களங்களில் புதிய வாழ்வின் அர்த்தத் தேடலை நோக்கி நம்மை அழைத்துச் செல்லுகிறது.

க. நா. சு. சொல்வதுபோல் ''கவிதையென்பது கவிதைக்கு ஏற்பட்ட எல்லைகளை மீற முயல்கிற போது தான் கவிதையாகிறது'' என்பதைப் புதுக்கவிதைக்காகச் சொல்லலாம்.

மீராவின் கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள்ஒரு வசன காவியமாகப் படைக்கப்பட்டுள்ளது.

''இரண்டில் ஒன்று சொல்லிவிடு
எனக்காக இனனொருத்தி
காத்துக் கொண்டிருக்கிறாள்
அவள் ஊருக்கு வெளியே
நின்று கொண்டிருக்கிறாள்
எனக்காகக் கல்லால்
ஓர் அழகிய அறை கட்டத் தயாராயிருக்கிறாள்
அவள் பெயர்......
அவள் பெயர்........
மரணம் '' ........மரணம்........!
(கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள், மீரா)

நா. காமராசனின் கவிதைகளிலும் இப்போக்கைக் காணலாம்.

''கையிலே விளக்கை ஏந்திக்கொண்டு
மனிதர்களைத் தேடிய கிரேக்க ஞானியைப்போல்
கண்களிலே ஏக்கம் சுமந்துகொண்டு
சோசலிச பூமியைத் தேடியவர்கள்
நீங்கள் மட்டும்தான்.''

(சகாராவைத் தாண்டாத ஒட்டகங்கள், நா. காமராசன்)

புதுக்கவிதையென்பது முற்றிலும் வசனத் தன்மையற்றுப் படைக்கும் கவிதைக் கலையாகும் இதில் கூற வந்த கருத்துக்கும், உணர்வுக்கும் ஏற்ப எண்ண அலகின் (Unit Thought) அடிப்படையில் வடிவம் பெறுகிறது. சான்றாகப் பின்வரும் கவிதைகளை நீங்கள் படித்துப் பாருங்கள்.

சிலையை உடை
என்
சிலையை உடை
கடலோரம் காலடிச்சுவடு
கதவைத்திற, காற்று வரட்டும் (பசுவய்யா)

புறத்திணைச் சுயம்வர மண்டபத்தில்
போலி நளன்களின் கூட்டம்
கையில் மாலையுடன்
குருட்டுத் தமயந்தி

(பால்வீதி, அப்துல் ரகுமான்)

சீதை மூழ்கிய தீயில் ராமன்
சந்தேகம் தகனம்
கண்ணகி மூட்டிய தீயில் அரசின்
கொடுங்கோன்மை தகனம் (இதுவரை, புவியரசு)

இனி எனக்கு
மரணம் ஒருபோதுமில்லை
நான்......நான்........
காலமாகி விட்டதால் (சூரிய நிழல், சிற்பி)

அழியும் சுவடுகளைப்பற்றிக் கவலைப்படாமல் மனிதன் அழியாப் பிரதியை ஏற்படுத்தும் ஒரு சுதந்திரச் சிந்தனையைப் பசுவய்யா 'காற்று' என்ற கவிதையில் சொல்லியிருப்பதை உணர்ந்திருப்பீர்கள். அதுபோல் அரசியல் கட்சிகளின் வீழ்ச்சியையும், தேர்தலின் போலித் தனத்தையும், கவிஞர் ரகுமான் கதையிலும், பெண்மை காலந்தோறும் மறுக்கப்பட்டதைக் கவிஞர் புவியரசு கவிதையிலும், மனிதன் காலத்தோடு கலக்கும்போது சரித்திரமாகி மரண விடுதலையைக் கூறும் கவிஞர் சிற்பியின் கவிதையும் சம காலத்தின் பிரதிபலிப்பையும், சுய அடையாளத்தின் தேடலையும் சொல்வதை அறிய முடிகின்றது.

இன்றைக்கு வெளிவந்துள்ள புதுக்கவிதைகளில் நல்ல கவிதை எது என்பதைத் தேடவேண்டிய பொறுப்பு வாசகருக்குரியது. அப்படித் தேடினாலும் 'கவிதை புரியவில்லை' என்பதும் முன்வைக்கப்படுகிறது. கவிதை வாசிப்பும், வாழ்க்கைத் தளங்களின் செயல்பாட்டையும் உணர்கிற போதுதான் கவிதைக்குள்ளிருக்கும் அர்த்த மீட்பைச் செய்யமுடியும்.

புதுக்கவிதைகளில் கவிஞர் வெளிப்படுத்தியுள்ள நிறுவன எதிர்ப்புத் தன்மை, நவீனத் தன்மை, பேச்சுக் கவிதை, செயல்பாட்டு நடப்புக் கவிதை போன்ற கூறுபாடுகளையும் புதுக்கவிதைகளுக்குள் தேடியும் படித்தும் பாருங்கள். அப்போது 'எது கவிதை' என்ற அடையாளம் உங்களுக்குள் உருவாகும்.



''நாம் பாடும் சங்கீதத்தைப்போல்
குயிலின் பாட்டில்
இலக்கணம் இல்லை
ஆனால்
குயில் பாட்டின் குதூகலம்
நம் சங்கீதத்தில் இல்லை''

அப்துல் ரகுமான்.

# 2. புதுக்கவிதையின் படைப்பு முறைகள்

இருபதாம் நூற்றாண்டில் கிடைத்த ஒரு புதிய இலக்கிய வடிவம் புதுக்கவிதை. இது மேலை இலக்கியக் காற்றாலும், புதுமைப் படைப்பு எண்ணமும் இந்த இலக்கிய வடிவத்தை உருவாக்கியுள்ளது. இந்நூற்றாண்டின் அறிவியல் வளர்ச்சியும், வாழ்க்கையும் கவிதையில் ஒரு நெகிழ்ச்சியை ஏற்படுத்தியது. நாவல், சிறுகதை போன்ற படைப்புக்களுக்குப் 'புது' என்னும் அடையில்லை. காரணம் இவ்விலக்கிய வடிவங்கள் முற்றிலும் நமக்குப் புதியவை

ஆனால் கவிதை என்பது நம் இலக்கிய வடிவங்களில் ஆட்சி செலுத்திய ஒன்றாகும். இவ்விலக்கிய வடிவங்கள் மரபுக்கவிதைகளால் படைக்கப் பட்டவை. இக்கவிதைகள் வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, விருத்தம் போன்ற வரையறுத்த வடிவங்களுக்குட்பட்டவையாகும். இக்கவிதை களில் வாழ்க்கையைப் பற்றிய நோக்கு பழங்காலப் போக் குடையன. ஆனால் புதுக்கவிதை சமகால வாழ்வைப் பாடும் ஒரு சுதந்திரமான வடிவமாகும். கவிதை என்பது ஒரு படைப்பு. அது மரபு, புது என்ற அடைகளைப்பெற்று வித்தியாசக் களங்களில் பயன்பட்டு வருகிறது. எனவே கவிஞன், மானுடத்துக்கு முகவரி என்றும், சூரியன் என்றும் இம்மண்ணின் விலாசத்தை விசாலப்படுத்துகிறவன் கவிஞன் என்றும் விமர்சனங்கள் சொல்லப்பட்டுள்ளன.

காலம் கொடுக்க முடியாத நம்பிக்கையை ஒரு கவிஞன் கொடுப்பான். அதனால்தான் தெலுங்குப் பழமொழி ‘ரவி காணாததைக் கவி காண்பான்’ என்று முன் மொழிந் துள்ளது. புதுக்கவிதை வாழ்வின் பிரமையை உடைத்து உண்மையைச் சொல்லி வாழ்வை அர்த்தமாக்க முயன்று உள்ளது. கவிஞர்கள் சமூகக் கொடுமையைக் கண்டு கோபமும், மானுடத்தோடு நேயமும் கொண்டு புதுக் கவிதைகளைப் படைத்துள்ளனர் ஒரு கவிஞன் கவிதை யைப் படைக்க அரசியல், சமூகம், பண்பாடு, வாழ்க்கை, இலக்கியம் போன்ற பின்னணிகள் மட்டும் போதாது. அதற்குக் கலைத்திறன் அடிப்படையாகும். இக்கவிதைக் கலைகூட ஒரு சமூக விஞ்ஞானம் என்பர். காரணம் மனித வாழ்வுக்கும், சமூக வாழ்வுக்கும் சமகால உணர்வோடு வழிகாட்டும் வடிவமாக விளங்குவதே ஆகும். எது கவிதை என்ற கேள்விக்குக் கவிஞர் சக்திக் கனல்,

எந்தக் கனல்பொறி
சமுதாய அழுக்குகளை எரித்து
அக்கினி மலர்களாகி

அலங்காரத் தோரணமாய்
மின்னுகிறதோ

எது
சோர்வுற்ற ரத்த நாளங்களில்
பூபாள ராகத்தை மீட்டி
வளைந்த முதுகை நிமிர்த்தி
தேவகானம் இசைக்கிறதோ

எது
காலப்புயலாகி
கண்ணகியின் சிலம்புப்பரலாகி
இந்திரனின் வச்சிராயுதமாகி
ராட்சதக் கழுகுகளின் இறக்கைகளை
வெட்டி வீழ்த்துகிறதோ

அதுதான்
அதுவேதான்
கவிதை

இப்படிப்பட்ட புதுக்கவிதைகளில் கவிஞர்கள் பயன்படுத்தியுள்ள படைப்பு முறைகள் இக்கட்டுரையில் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

## படைப்பு முறைகள்:

புதுக்கவிதையில் உவமை, குறியீடு, தொன்மம், படிமம் அங்கதம், அறிவியல், இலக்கியம், நாட்டுப்புறவியல் தாக்கம், கதைப் போக்கு, காட்சிப் படுத்தல் முதலிய கூறுகள் கவிஞர்களின் படைப்பு முறைகளாகும்.

இம்முறைகள் கவிதைப் படைப்புக்கும் சொல்லவந்த கருத்துக்களுக்கும் எப்படிப் பயன்பட்டுள்ளன என்பதும் சொல்லப்பட்டுள்ளன. இப்படைப்பு முறைகளை 'உத்தி' என்ற பெயராலும் குறிப்பிடுவர். கவிஞர்களின் கவிதைகளில் காணும் படைப்பு முறைகள் இக்கட்டுரை வெளிப்படுத்தும் மையக் கருத்தாகும். இக்கட்டுரையில் புதுக்

கவிஞர்கள் பயன்படுத்தியுள்ள படைப்பு முறைகளில் சில மாதிரிகள் மட்டும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. கவிதையின் அழகும், அர்த்தமும் வெளிப்பட இப்படைப்பு முறைகள் பயன்படுகின்றன. இப்படைப்பு முறைகளால் வெளிப்படுத்தியுள்ள சமுதாய நோக்குநிலைகளும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

**உவமை:**

உவமை என்பது அன்று முதல் இன்று வரை கவிதைப் படைப்புகளில் பயன்படுத்திவரும் ஓர் உத்தியாகும் இதில் சொல்லவந்த பொருளையும், அப்பொருளுக்குரிய இன்னொரு பொருளையும் இயைபுபடுத்தி அமைத்துக் காட்டுவர். ஒரு பொருளை இன்னொரு பொருளால் அர்த்தப்படுத்திக் காட்டுவது உவமையாகும். இதில் இரண்டு பொருள்களும் வெளிப்படையாகக் கவிதையில் அமையும். அதேபோல் ஒரு பொருளை இன்னொரு பொருளால் குறிப்படுத்திக் காட்டுவது குறியீடாகும். ஆனால் இதில் சொல்லவந்த பொருளுக்குரிய குறியீடு மட்டும் கவிதையில் இடம்பெறும். கவிஞர் உணர்த்த விரும்பிய பொருளைக் குறியீட்டுக்குள் பொருத்திப்பார்த்து உணரவேண்டும். இது உவமைக்கும், குறியீட்டுக்குமுள்ள வேறுபாடாகும். புதுக்கவிஞர்கள் உவமையை நவீன வாழ்க்கையோடும், சம காலத்தோடும் தொடர்பு உடைய பொருள்களால் புதிய போக்கில் படைத்துள்ளனர் என்பதும் கவனிக்கத்தக்கது. கவிஞர் கௌதமன் காதலி கொடுத்த உறுதிமொழிகளுக்கு அரசியல்வாதியின் உறுதி மொழிகளை உவமைப்படுத்தியுள்ளார்.

'கடற்கரையில் நாம் பழகிய
பொழுதுகளை நினைத்துப் பார்!
அன்று பேசிய வார்த்தைகள்
கடற்கரைக் கூட்டத்தில்
கட்சிகள் வழங்கும்

உறுதிமொழிகள் போல்
காற்றில் கரைந்து விட்டன'

## குறியீடு:

புதுக்கவிதைக் கவிஞர்கள் குறியீட்டை மிகுதியாகப் பயன்படுத்திப் புதுக்கவிதைகளைப் பல வகைகளில் படைத்துள்ளனர். குறியீடு என்பது ஒன்றை இன்னொன்றால் குறிப்படுத்திப் படைப்பதாகும். சொல்லவந்த பொருளுக்குரிய குறியீடுகள் வெளிப்படையாகக் கவிதைகளில் வரும். அக்குறியீடுகளின் மூலம் கவிஞர் உணர்த்த விரும்பிய பொருள் உட்கருத்தாக அமைந்திருக்கும். கவிஞர் மேத்தா திருமணமாகாத பெண்களை அரளிப் பூவாகக் குறியீடாக்கி அவர்களின் வேதனையை அழகையாக வெளிப்படுத்தியுள்ளார்.

'பூக்களிலே நானுமொரு
பூவாய்த்தான் பிறப்பெடுத்தேன்
பூவாகப் பிறந்தாலும்
பொன்விரல்கள் தீண்டலையே!
பொன்விரல்கள் தீண்டலையே - நான்
பூமாலையாகலையே!'

இந்தக் கவிதையைப் படித்துப் பார்த்தால் குறியீடும் குறியீட்டுக்குள்ள பொருளும் உங்களுக்குப் புரிந்துவிடும்.

## தொன்மம் :

கவிஞர்கள், கவிதையின் அழகும், அர்த்தமும் வெளிப்பட படைப்பு முறைகளைப் பயன்படுத்தியுள்ளனர். இப்படைப்பு முறைகளில் உலகமரபு. இந்திய மரபு தமிழ் மரபு ஆகியவை கலந்தும் படைத்துள்ளனர். இப்படைப்பு முறைகளில் மரபும், மரபு மாற்றமும் நிலவுகின்றன. இந்திய நாட்டில் பழம்பெரும் புராணங்களின் பின்னணியும், சமய வாழ்க்கை முறையும் இரண்டறக் கலந்து நிலவும் போக்கு மக்களிடையே காணப்படுகின்றன.

இப்போக்கை உணர்ந்த கவிஞர்கள் அன்று முதல் இன்று வரை புராணக் கருத்தாகிய தொன்மத்தைப் பயன்படுத்தியுள்ளனர். எல்லா நாட்டின் கவிதைப் படைப்பிலும் இத் தொன்மக்கூறு. மரபோடும், புதிய பரிணாமப் பெருாளோடும் காணப்படுகின்றன அதேபோல் இந்தியத் தொன்மங்களாகிய பாரதம், இராமாயணம் புதுக்கவிஞர்களின் படைப்பு முறைக்குப் பெரிதும் பயன்பட்டுள்ளன இவற்றைக் கவிஞர்கள் தாம் சொல்ல வந்து கருத்துக் கேற்பச் சமகால வாழ்வைப் பிரதிபலிக்கத் தொன்மக் கருத்துக்களைத் தேவையான இடங்களில் மாற்றியும். புதுப்பொருள் கற்பித்தும், மதிப்பிழக்கச் செய்தும் பயன் படுத்தியுள்ளனர்.

தமிழ் இலக்கியத்தில் கண்ணன் ஒரு சிருங்கார நாயகன் அவன் கையிலிருக்கும் புல்லாங்குழலே ஒரு இன்பக் குறியீட்டுக் கருவியாகப் பயன்படுத்தி வருவது மரபுநிலையாகும். புல்லாங்குழலை மனிதக் காதலுக்கும், ஆன்மீகக் காதலுக்கும் பயன்படுத்தியுள்ளனர்.

''புல்லாங்குழல் கொடுத்த மூங்கில்களே
எங்கள் புருஷோத்தமன் புகழ் பாடுங்களே''

என்ற பாட்டில் கண்ணதாசன், புல்லாங்குழலை ஒரு பேரின்பக் கருவியாகச் சித்திரித்துள்ளார். ஆனால் புவியரசு, புல்லாங்குழலை மரபு நோக்கிலிருந்து மாற்றிப் புதிய நோக்கில் விடுதலையைப் பாடும் கருவியாக முதன்முதலில் குறிப்படுத்தியுள்ளார்.

''பூமி மண்ணை நோக்கித்
தலை வணங்கி யாசிக்கும்
சகோதர நாணல்களுக்காக
நீ சொல்லும் அந்த
விடுதலை ரகசியந்தான் என்ன?''

என்ற கேள்வியில் புவியரசு, புல்லாங்குழலை மானுடத்தின், விடுதலைக் கீதம் பாடும் கருவியாக்கியிருப்பதால் மரபு

மாற்றத்தையும், புதிய பரிணாமப் பொருளையும் வெளிப் படுத்தியுள்ளார்.

மதுரையில் சில ஆண்டுகளுக்கு முன் தீபாவளிக்கு இலவச சேலை வாங்க அடையாள அட்டை வழங்கப்பட்டது. இந்த அட்டை வாங்கப்போன பெண்களில் 19பேர் நெரிசலில் இறந்து போனார்கள். இச்சோக நிகழ்ச்சியை மாணவக் கவிஞர் பா. சௌந்திர ராசன். 'இலவசத்திற்கு ஒரு விலை' என்ற தலைப்பில் புதிய மகா பாரதத்தைப் படைத்துக் காட்டியுள்ளார்.

'மதுரையிலே ஒரு மகாபாரதம்
புடவை கேட்ட பாஞ்சாலிகளின்
உயிர்களை உரிந்தான்
வறுமைக் கண்ணன்
மதுரையிலே ஒரு மகாபாரதம்'

இந்தியப் பாஞ்சாலிகளின் குருதியில்
நிலத் துரியோதனன்
தலையை முடித்தான்
மதுரையிலே ஒரு மகாபாரதம்'

என்ற கவிதையில் மகாபாரதமே தலைகீழாகப் படைத்துக் காட்டப்பட்டுக் கலியுக தர்மம் வெளிப்படுத்தப்படுவதாக உள்ளது.

**படிமம் :**

புதுக்கவிதைகளில் படிம உத்தியைப் பலரும் கையாண்டுள்ளனர். குறியீடு (symbol) என்பது வேறு : படிமம் (Image) என்பது வேறு. சில நேரங்களில் படிமங்கள் குறியீடாகமாறும் ஆனால் படிமங்கள் எல்லாம் குறியீடாவதில்லை என்கிறார் அப்துல் ரகுமான். குறியீட்டில் வாசகர்களுக்கு ஒரு துல்லியமான பொருள் வெளிப்பாடு இருக்கும். ஆனால் படிமத்தில் வாசக அனுபவங்களுக்கு ஏற்பப் பொருளைக் குறிப்படுத்தி வளர்த்து

கொள்வதில் வித்தியாசமான விளைவைத் தரும். படிமம் மனத்துள் காட்சிகளைச் சித்திரிக்கும் தன்மை கொண்டது. படிம உணர்வு, உணர்ச்சி, அறிவுத் தளங் களில் விளைவை ஏற்படுத்தி அறிவார்ந்த அர்த்தத்திற்கு வாசகனை அழைத்துச் செல்லும் இயல்பு கொண்டது என் கிறார் விமர்சகர் - கவிஞர் பாலா.

அப்துல் ரகுமான் மின்னலைக் கற்பனைப்படுத்தும் போது,

''வான உற்சவத்தின்
வாண வேடிக்கை (காட்சிப்பொருள் — வேடிக்கை)
முகிற்புற்று கக்கும்
நெருப்புப் பாம்புகள் (காட்சிப்பொருள்-உணர்ச்சி)
கறுப்பு உதட்டின்
வெளிச்ச உளறல்
இடிச் சொற்பொழிவின்
சுருக்கெழுத்து'' (உணர்ச்சி — அறிவுநிலை)

என்பதில் படிமத்தைக் காட்சி, உணர்ச்சி, அறிவு நிலைக் களன்களின் வாயிலாக வெளிப்படுத்திக் காட்டியுள்ளார்.

## இலக்கியம் :

மக்கள் அறிந்துள்ள இலக்கியத்தை அடிப்படையாக வைத்துச் சமகால வாழ்வைப் புதுக்கவிஞர்கள் விமர்சனப் படுத்தியுள்ளனர்.

'அன்று
கண்ணகி
கோவலனுக்காகச்
சிலம்பை உடைத்தாள்.
மதுரை எரித்தாள்

ஆனால்
இன்றைய

கோவலர்கள்
சிலம்புக்காகக்
கண்ணகியை எரிக்கிறார்கள்'

என்று பாடியுள்ள அப்துல் ரகுமானின் கவிதைகளில் முதற் பகுதி சிலம்பின் கதையையும், பிற்பகுதி, நிகழ்கால வாழ்வில் நடக்கும் வரதட்சணை வதையையும் கவிதையாக்கியுள்ளார். இதே நோக்கில் பாடியுள்ள அறிவன்.

''கால மகளோ
கற்புச் சிலம்பைக்
கைகளில் கொடுத்து
இளமைச் சிலம்பைத்
திருடிப் போனாள்
இன்னும் அம்மி மிதித்து
அருந்ததி காட்டித்
தாலிக் கயிற்றில்
தரைப்படுத்திக் கொள்ள
'வணிக மகனோ' வரவில்லை''

என்ற கவிதையில் சிலப்பதிகாரக் குறியீட்டின் மூலம் வணிகத்தனமாக மாறிப்போன திருமணத்தை எடுத்துக் காட்டியுள்ளார்.

## காட்சிப்படுத்தல் :

புதுக்கவிதையில் நிகழ்ச்சியைக் காட்சிப்படுத்தி மனித உணர்வை வெளிப்படுத்த முயன்றுள்ளனர். இப்போக்கில் அதிகாலையில் வீட்டைச் சுத்தம் செய்து கோலமிடும் ஒரு மங்கை. அவ்வீதியில் போன இளைஞனைப் பார்த்த மனதைக் காட்சிப் படுத்தும்போது கவிஞர் கல்யாண்ஜி.

''கருப்பு வளையல் கையுடன் ஒருத்தி
குனிந்து வளைந்து பெருக்கிப் போனாள்
வாசல் சுத்தமாச்சு மனசு குப்பையாச்சு''

என்று கவிதையாக்கியுள்ளார்.

## முரண் :

பொதுவாக அன்றும், இன்றும் கவிதைப் படைப்பில் 'முரண்' கவிதை வெளிப்பாட்டுக்கு ஒரு சிறந்த உத்தியாகப் பயன்பட்டு வந்துள்ளது. இவ்வுத்தி புதுக்கவிதையிலும் மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டு வருகிறது.

''நாங்கள் சேற்றில் கால் வைக்காவிட்டால்
நீங்கள் சோற்றில் கை வைக்கமுடியாது''

என்ற கவி ஜோதியின் கவிதையில் சேறும், சோறும், காலும், கையும் முரண்பட்ட நிலையில் வந்து கவிப் பொருளைப் அர்த்தப்படுத்தியுள்ளது.

இந்தியாவில் பலர் வறுமையோடும், சிலர் ஆடம்பர வாழ்வோடும் இருப்பதைச் சொல்ல வந்த கவிஞர் சுபாசு.

பல இடங்களில்
வயிறு பட்டினி கிடக்கிறது.
சில இடங்களில்
சோறு பட்டினி கிடக்கிறது.

என்பதில் முரண் உத்தி மூலம் முரண்பட்ட சமூக அமைப்பைக் காட்டியுள்ளார். இதேபோல் கவிஞர் தமிழன்பன்,

'அவர்கள் வேர்வை கடலாகிறது
சிலர் வாழ்வு மட்டும் அதிலே படகாகிறது'

என்றும் பாடியுள்ளார்

## நாடகப் போக்கு:

தமிழ்க் கவிதை உலகில் மீராவின் 'கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள்' ஒரு குறிப்பிடத்தக்க படைப்பு. இதில் காதலர்களின் ஆன்மத் தவிப்பை நாடக பாணியில் உரையாடல் போக்கில் அமைத்துள்ளார் கவிஞர் மீரா.

காதலியின் உறுதியான முடிவைக் கேட்க விரும்பிய காதலன்.

இரண்டில் ஒன்று சொல்லிவிடு
இப்போது என்னால்
எதையும் தாங்கிக் கொள்ளமுடியும்

எனக்காகக் கல்லால்
ஓர்அழகிய அறை கட்டத் தயாராகியிருக்கிறாள்
அவள் பெயர்
அவள் பெயர்
மரணம்........

என்று பேசவைத்து வாசக மனத்துக்குள் ஒரு திடீர் திருப்பத்தையும் ஏற்படுத்தி விடுகிறார் மீரா.

## கதைப்போக்கு :

ஒரு சிறுகதையாகப் படைக்கக் கூடிய நிகழ்ச்சியைக் கதைப் போக்கில் சொல்லவந்த பொருளை வெளிப் படுத்தலும் புதுக்கவிதையின் படைப்பு முறைகளில் ஒன் றாகும். இக்கதைப்போக்கு அடிப்படையில் வேலைக்குப் போகும் தாயிடம், அன்புக்கு ஏங்கும் குழந்தையின் தவிப் பைக் கவிதையாக்கியுள்ளார் கவிஞர் சுப்ரமண்யராஜு. 'வெறும் மனைவி' என்ற தலைப்பில்.

''அம்மாவும் ஆபீஸ் போகிறாள்
அப்பாவின் ஸ்கூட்டரின பின்னே
வீட்டிலே பாட்டி உண்டு
கட்டிலில் படுத்திருப்பாள்
ஊட்டி விட ஆளில்லை
உடல் முழுக்கச் சோறாச்சு
மாலையில் திரும்பி வருவாள்
ஆபீஸின் அலுப்பை ஊட்ட
நாக்கின் ருசியெல்லாம்
ஞாயிறில் மட்டுமே உண்டு
நாளைக்கு நானும் போவேன்

நான் மட்டும் ஆபீஸ் போவேன்
வேலைக்குப் போகாத
வெறும் மனைவி எனக்குப் போதும்''

என்பதில் குழந்தையின் மன உணர்வைக் கதை சொல்வது போல் படைத்துள்ளார்.

## நாட்டுப்புறத் தாக்கம் :

எல்லா இலக்கிய வடிவத்துக்குள்ளும் நாட்டுப்புற வியலின் தாக்கம் காணப்படுகிறது. மண்ணையும், மனிதனையும் விசாலப்படுத்த புதிய முகவரி எழுத முயன்ற புதுக்கவிதைகளில் நாட்டுப்புறக் கதைகள், பாடல்கள், தாலாட்டு, பழமொழிகள், விடுகதைகள் முதலிய கூறுகளைப் படைப்பு முறைகளுக்குப் பயன்படுத்தியுள்ளனர் புதுக்கவிஞர்கள் நாட்டுப்புறவியலின் வடிவங்களைத் தம் கவிதைகளில் கையாண்டுள்ளனர். இக்கவிதைகள் நாட்டுப்புற மக்களின் பாடல்களல்ல ; அம்மக்கள் பாடிய வடிவங்களை நாட்டு நடப்புக்கும், சமுதாயச் சிக்கல்களுக்கும், கிராமிய மக்களின் அவலநிலைகளுக்கும் எடுத்தாண்டுள்ளனர். இன்றைய வணிக சமூகத்தில் திருமணம் என்பது வரதட்சணை கொடுமைகளால் பல பெண்களுக்கு நடைபெற முடியாத சிக்கலாக உள்ளது. இந்தச் சிக்கலை நா. காமராசன், மேத்தா' வைரமுத்து, சிற்பி முதலான கவிஞர்கள் புதுக்கவிதைகளில் அடையாளப்படுத்தியுள்ளனர்.

மணமாகாத பெண்களின் அவலக்குரலைக் கவிஞர் வைரமுத்து.

''அல்லிப்பூ தாமரைப்பூ
ஆயிரம்பூ பூத்தாலும்
கல்யாணப் பூவெனக்குக்
காலமெல்லாம் பூக்கலையே''

என்பதில் பெண்களின் வேதனை உணர்வை முன் வைத்துள்ளார்.

வாசகர்களே! புதுக்கவிதையின் படைப்பு முறைகளில் சில சான்றுகளை உங்களின்முன் வைத்துள்ளேன். ●

விளைத்த வினை
விளைந்தது
விளைந்தவை உதிர்ந்து
மீண்டும் பெருகின
மீண்டும் பெருகின
மீண்டும்........

— அபி.

# 2. பசுவைய்யாவின் கவிதைகளில் இயற்கைப் படிமம்

புதுக்கவிதையின் படைப்புக்குத் துணை செய்வது படிமம் ஆகும். படிமம் என்பது முற்காலத்தில் கவிதையின் கூறு மட்டுமே. புனைவியக்க காலத்திற்குப் பின்பு இருபதாம் நூற்றாண்டில் தோன்றிய படிம இயக்கம் கவிதையே படிமம் என்ற கருத்தை முன்வைத்தது.

''ஒரு ஓவியமோ அல்லது சிற்பமோ தன்னைச் சொற்களின் மூலமாக வெளிப்படுத்திக் கொள்ளும்முறை'' என்று

கவிதைப் படிமத்தை மேலும் விளக்கியுள்ளார் படிம இயக்கத் தந்தை எஸ்ரா பவுண்ட்.

புதுக்கவிதையில் படிமக்காட்சியை அர்த்த இயைபுக்கும், கருத்து விளக்கத்துக்கும் பெரிதும் பயன்படுத்தியுள்ளனர். புதுக்கவிதைப் படைப்பாளிகளில் கவனிக்கத் தக்கவர் பசுவய்யா (சுந்தர ராமசாமி). இவருடைய கவிதைகளில் படிமத்தை அதிக அளவில் கையாண்டிருப்பதால், இவரைப் படிமக் கவிஞர் என்றும் கூறலாம். இவர் தம் கவிதைகளில் இயற்கைப் படிமங்களையும், செயற்கைப் படிமங்களையும் பயன்படுத்தியுள்ளார். இக்கட்டுரையில் காற்று, கடல், வானம், மரம் ஆகிய இயற்கைப் படிமக் காட்சிகள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

## படிமம்:

படிமம் என்பது கவிஞன் ஒருவன் கண்ட காட்சியைக் கவிதையில் கற்பனையாக உருமாற்றம் செய்வதாகும். அக்கற்பனையின் விளைவு படிமமாகும். படிமம் அலங்காரமாக இல்லாமல் அர்த்த இயைபிற்குப் பயன்பட வேண்டும். ''உவமைகள், உருவகங்கள் போலவே படிமங்கள் அர்த்தத்திற்கு மேலும் வெளிச்சம் ஏற்றப் பயன்படுகின்றன'' என்றும், ''படிமம் என்பது நம் உணர்ச்சிகளையும் கிளர்ந்தெழச் செய்கின்றது. நம் மனத்தையும் இயக்கிக் கவிதை அனுபவத்தைத் தந்து விடுகிறது'' என்றும் விளக்கியுள்ளார் விமர்சகர் பாலா.

''அறிவும், உணர்ச்சியும் இயைந்த மன விளைவைச் சட்டென்று தெரியக் காட்டுவது படிமம்'' என்பது படிமக் கவிஞர் உற்யூமின் கருத்தாகும்.

'' ஒரு சொற்றொடரோ அல்லது உவமையோ அல்லது உருவகமோ படிமத்தைப் பெற்றுத் தரமுடியும். பார்ப்பதற்கு விவரிப்பு மாதிரி உள்ள பகுதி நீண்ட படிமமாக ஆக்கப்படலாம்'' என்றும் விளக்குகின்றார் கவிஞர் பாலா.

படிமம் அலங்காரச் சொற்களை அதிகம் நம்புவதில்லை ; மிகைத் தன்மையையும், அனாவசியச் சொற்களையும் ஏற்றுக் கொள்வதில்லை படிமத்தைக் கவிதையில் அர்த்தச் சிறப்பிற்காக வருணனையாகவும், குறியீடாகவும் காட்சிப்படுத்தும் போக்குப் பசுவய்யாவிடம் காணப்படுகிறது. குறியீடுகளும், வருணனைப்படிமங்களும் புலன் உணர்வைக் கிளர்வதன் வாயிலாகக் கவிதைக்குத் தெளிவையும், அழகையும் உண்டாக்கும் ஆற்றலைப் பெறுகின்றன என்றும் கவிஞர் அப்துல் ரகுமான் விளக்கியுள்ளார்.

படிமம், குறியீடு இரண்டும் ஒன்று என்று கருதும் தவறு பலரிடம் காணப்படுகிறது. சில படிமங்கள் குறியீடாகச் செயற்படலாம். ஆனால் படிமங்கள் எல்லாம் குறியீடாவதில்லை. படிமங்கள் வெறும் வருணனையாக இருக்கும்போது நேர் பொருளேபோதும் என்ற நிலையில் இருந்தால் அவை வெறும் படிமங்களே ; குறியீடுகள் அல்ல. மற்றொரு உட்பொருளை உணர்த்தும் நிலையில் தான் படிமம் குறியீடாகிறது. ஒரு படிமம் உருவக நிலையில் உருவாக்கப்பட்டுத் தன்னையும் உணர்த்திப் பிறிதொன்றையும் உணர்த்தும் வகையில் மீண்டும் மீண்டும் வந்தால் அது குறியீடாகி விடுவதுண்டு'' என்ற கருத்தையும் எடுத்துக்காட்டியுள்ளார் கவிஞர் அப்துல் ரகுமான்.

பசுவய்யா தம் கவிதைகளில் இயற்கையின் நேசிப்புக்கும், வாழ்க்கையின் சுவாசிப்புக்கும் காற்று, கடல், வானம், மரம் போன்ற இயற்கைக் காட்சிகளைப் படிமங்களாகப் படைத்துக் காட்டியுள்ளார்.

**காற்று :**

''கதவைத் திற, காற்று வரட்டும்
சிறகை ஒடி
விசிறியின்
சிறகை ஒடி

விசிறிக்குள் காற்று
மலடிக்குக் குழந்தை
கதவைத்திற, காற்று வரட்டும்,

உணவை ஒழி
உடலின்
உணவை ஒழி
உணர்வில் உயிர்
நீருள் நெருப்பு
கதவைத் திற, காற்று வரட்டும்.

சிலையை உடை
என்
சிலையை உடை
கடலோரம் காலடிச் சுவடு
கதவைத் திற, காற்று வரட்டும்''

இக்கவிதையில் பசுவய்யா, கதவைப் பூட்டிக் கொண்டு காற்றைச் சுவாசிக்க முடியாது என்பதால் கதவைத் திறந்து காற்றைச் சுவாசிக்க வேண்டுமென்கிறார். இது ஒரு வீட்டுச் சூழலை, ஒரு புழுக்கத்தை மேலோட்டமாகச் சொல்கிறது. ஆனால் இந்தப் படிமக் காட்சிக்குள் 'காற்று' என்பதை ஒரு சுதந்திரச் சிந்தனையின் குறியீடாக்கி யுள்ளார்.

நாம் மரபுகளையும். கட்டுப்பாடுகளையும் வைத்துக் கொண்டு சின்னச் சின்ன மாற்றங்களால் சுதந்திரச் சிந்தனையைப் பெறமுடியாது என்பதை விசிறிக்குள் காற்றில்லை என்பதால் புலப்படுத்தியுள்ளார். உணவுக்குள் உயிரில்லை என்பது சிந்தனையால்தான் உயிர்நிலை பெறமுடியும் என்பதைக் காட்டுகிறது. மனிதனைத் துதி பாடுதல் புதிய சிந்தனையில் அழிந்துபோகும் என்பதைக் 'கடலோரம் காலடிச்சுவடு' என்றும் காட்சிப்படுத்தி யுள்ளார். காலத்துக்கும், வாழ்க்கைக்கும் தேவையான

புதிய சிந்தனையை வரவேற்றுத்தான் ''கதவைத்திற, காற்று வரட்டும்'' என்று திரும்பத் திரும்பச் சொல்லி உள்ளார்.

''காற்று கதவைத் தட்டும்
முட்டும்
தாழிட்டதில்லை

ஒருக்கழித்த கதவுகள் மீது
ஆங்காரம் கொள்ளும்
திற அல்லது மூடு
எனக் கத்தும்

எனினும் தூசி போர்த்தும்
நெடுகிலும் பரப்பும்

எனது பெயர்
உக்கிரப் பெருவழுதி
எனக் கூறிச் செல்லும்
சருகு உதிர்க்கும்
எனினும் தளிர் ஒடிக்கும்

மூட ஜென்மம்

எனினும் குருவிகளை முத்தமிடும்
அதிர்ஷ்டம் கொண்டது'' (காற்று)

இதில் 'காற்று' வாழ்க்கைக்குத் தேவையான, நித்தியமான சக்தியாகக் குறியீடு படுத்தப்பட்டுள்ளது. வாழ்க்கையின் ஓட்டத்தில் புதிய சிந்தனைகளை ஏற்றுக் கொள்ளாதபோது காற்று கோபமாகவும் செயல்படுகிறது. உக்கிரப் பெருவழுதியைப் போல் பெருத்த ஆற்றல் பெற்ற காற்று உதிரவேண்டிய சருகை உதிர்க்கும், வளரவேண்டிய கிளையையும் ஒடிக்கும். இது இயற்கையின் குணமாகும். இருந்தாலும் காற்று இயற்கையை, அழகை நேசிக்கும் தன்மையைத்தான்.

''எனினும் குருவிகளை முத்தமிடும்
அதிர்ஷ்டம் கொண்டது''

என்று அடையாளப்படுத்தியுள்ளார்.

'காற்றைத் தேடி' என்ற கவிதையில் காற்று என்பது ஒரு இலட்சியத் தேடலாக விவரிக்கப்படுகிறது.

''காற்றின் நஞ்சை இழுத்து
திணறிற்று என் மூச்சுக் குழாய்
மேற்குக் கடலோரம் சென்றால்
கலப்படம் குறைந்த காற்று
கிடைக்கும் என்றார்கள்''

என்பதில் காற்றை மாசுபடுத்திய சமூகத்தில் வாழமுடியாத ஆன்மா நல்ல காற்றைத் தேடிப் பயணப்படுகிற காட்சி உருவாகிறது.

''கடலில் நீச்சலடித்துச் சென்றால்
அடிவானம் தாண்டியதும்
காற்றுக் கிடைக்கலாம்
என்றார்கள்.

பறக்கத் தெரிந்தால்
மேக மண்டலங்களைத் தாண்டி
காற்றை இழுக்கலாம்
என்றார்கள்.

நான் ஆயத்தமானேன்.
அப்போது எனக்கு
தாகம் எடுத்தது
நா வரள

தலை சுற்றிற்று
குடிநீர் குடிநீர் என்று
முனகத் தொடங்கினேன்
காற்றிடம் தான் கேட்க வேண்டும்
என்றார்கள்''

காற்றாகிய புதிய இலட்சியத்தைத் தேடிப் போகும்போது அடிப்படைத் தேவையாகிய தண்ணீர் தேவைப்படுகிறது. அந்தத் தண்ணீருக்கும் காற்றிடம்தான் கேட்கவேண்டும் என்று ஒரு முரண்பட்ட படிமக் காட்சியை இக்கவிதையில் அமைத்துள்ளார். இப்படித்தான் நம் நாட்டு இலட்சியங் களும், தேவைகளும் முரண்பட்டுக் கிடக்கின்றன. இதில் இயற்கையை மாசுபடுத்தாத ஒரு சமூகத் தேடலும் அடி நாதமாகி இருக்கிறது. இயற்கையில்தான் மனிதன் வாழ முடியும் என்ற உறுதியையும் உணர வைத்துள்ளார்.

**கடல்:**

'கடலில் ஒரு கலைஞன்' என்ற கவிதையில் கடலை யும், கலைஞனையும் ஒப்பிட்டுப் பல நிலைகளில் காட்சிப் படுத்தியுள்ளார். கலைஞனின் ஆசை அலை, காம அலை, எண்ண அலை, அகந்தை ஆகிய எல்லாம் அழிந்து அவனும் செத்துப் போகிறான். ஆனால் கடலின் அலை பல விசுவரூபத்தை எடுத்து ஜீவித்துக் கொண்டிருக்கும் நிலையைப் பார்த்து,

> ''அலையே
> நீயும் நீரே
> எனினும்
> உன்னில் கலந்த
> உப்போ
> வெறும் உப்பே'' என முடிக்கிறார்.

கடல் என்றும் இயற்கை வாழ்வுக்கு ஆதர்சனமாகஇருந் தாலும் கலைஞனின் படைப்பு சாகாத குணம் படைத்த தால் உப்பைக் காட்டிலும் உயர்ந்தது என்பதை உணர வைத்துள்ளார். கடலில் 'நான்' என்னும் ஆங்காரம் இருக் கிறது. ஆனால் கலைஞனின் 'நான்' அழிந்து போகிறது ஆயினும் கலைஞனின் படைப்பு அழியாத மாசக்தியாகிறது.

> ''கல்லும் பிராணன் இழுத்து
> மேலெழுந்து பறந்தது.

அலைகள் பாதம்முளைத்துக்
கரையேறி வந்தன
திசுக்கள் பரிணமித்து
வேதங்கள் கோஷித்தனர்.
மூளைச் சுடரில் அங்குசம்பட்டு
பிளிறி எழுந்த யானைகள்
மின்னலும் மழையும்
பின்பக்கம் நின்றன.
அத்தனையும் முடிந்து
ஒரு விசும்பல் எழுந்தது.
ஏன் என்றது வானம்
நான் யார் என்று கேட்டது
மண்ணின் குரல்
கடல் சிரித்தது. (கடல் சிரித்தது)

இக்கவிதையில் மனிதனின் பரிணாம வளர்ச்சிபெற்று (வேதங்கள் கோஷித்தனர்) அவன் ஆற்றிய பிரும்மாண்டமான சாகசங்கள் செய்தான்.) (யானைகள், மின்னல், மழை,) மனிதன் அழுகிறான்; உடனே பிரபஞ்சம் (வானம்) ஏன் என்று கேட்க, மனிதன் 'நான் யார்' என்று கேட்டவுடன் கடல் சிரிக்கிறது என்று கிண்டல் தொனியோடு இக்கவிதையை மிகச் சரியாகப் படைத்துள்ளார் பசுவய்யா. மனிதனின் பரிணாம வளர்ச்சி அவனுக்குரிய 'சுய அடையாளத்தை' இன்னும் உணர்த்தவில்லை என்பதை இக்கவிதைச் சுட்டிக்காட்டியுள்ளது.

'கடலுக்குத் தெரியாது' என்ற கவிதையில் மனிதனின் முழுமையான பிரகிருதியாக இருப்பது கடல் என்னும் தாய் என்பதைச் சொல்ல வந்த கவிஞர்,

''மனிதனின் சகல இருள்களும் ஒளிகளும் கடல்
அறியும்
தன்உதிரத்தில் தோன்றிய ஜீவனைத் தாய்அறிவாள்
எனினும் சூல் கொண்டபோது
களி நடனங்கள்

சாகசங்கள்
அதிசாமர்த்தியங்கள்
கரையில்
இப்படித் தாண்டித் தெறிக்கும் என்பது
அவளுக்குத் தெரியாது
இப்போது அலை உறுமலின் எச்சரிக்கைக் காலம்
கரையை கடலாக்குவது அவளுக்கு ஒரு
பொருட்டல்ல''

இக்கவிதையில் மனிதனின் நாகரிக வீழ்ச்சி, கரையில் நடப்பது சூல் கொண்டபோது கடலுக்குத் தெரியாது என்றாலும் வீழ்ச்சியை மாற்றியமைக்கும் மகத்துவ சக்தி கடலுக்குண்டு என்பதைத்தான்,

''கரையைக் கடலாக்குவது அவளுக்கு ஒரு பொருட்டல்ல'' என்ற இயற்கையின் எச்சரிக்கையை முன்வைத்துள்ளார்.

'அடிவயிறு குளிரும் காலம்' என்ற கவிதையில் பிரபஞ்சத்தில் பிரளம் ஏற்பட்டபோது,

''பிரபஞ்சம் அதிர்ந்தது அன்று
கடல்கள் உறைந்தன பனிக்கட்டியாய்
ஜீவராசிகள் நெருக்குண்டு மரித்தன.
மிதக்கும் உரிமையும் பிணங்கள் இழந்து
ஆழப் புதைந்தன அடிவயிற்றில்
மானிடம் திகைப்பில் குலைந்தது'' என்று

எடுத்துக்காட்டியுள்ளார். இந்தச் செயலற்ற சமூகத்தில் (கடல்கள் உறைந்தன) மனிதப்பண்பு (சூரியன்) மையங்கொண்டால் சமூகம் செயல்படக் கூடியதாக (ஆர்ப்பரித்தெழும் கடல் மீண்டும்) மாறும் என்பதை,

''எனினும்
என்றேனும் ஒரு நாள்
சூரியன் கரை இறங்கும்

கடலைத் தழுவிப் புணர
பனிக்கட்டி உருகி வழிந்தோட
ஆர்ப்பரித்தெழும் கடல் மீண்டும்
நம் அடிவயிறு குளிரும்''

என்று படிமக் காட்சியாக்கியுள்ளார்.

'விம்மச் செய்யும் கடல்' என்ற கவிதையில் கடலின் நிலைபெற்று நில்லாத பல நிலைகளைக் காட்சிப்படுத்திக் காட்டியபின்,

''ஒவ்வொன்றும் பரிணாமத்தின் பக்கங்களுக்கு
என்னை அழைத்துச் சென்று
வியப்பில் விம்மச் செய்கிறது.
இருப்பினும் அதன் நிலையற்ற தன்மை
இருப்பினும் அதன் சஞ்சலம்
இருப்பினும் அதன் மாறிவரும் நிறங்கள்
இருப்பினும் அது கடல்''

என்று எடுத்துக்கூறியுள்ளார். இதில் கடலை ஒரு மாறி வரும் பிரபஞ்சமாகக் காட்சிப்படுத்தியுள்ளார். உலகில் எதுவும் நிலையில்லை எல்லாம் மாறும் தன்மை கொண்டது என்பதையும் புரிய வைத்துள்ளார்.

**வானம் :**

இவருடைய கவிதைகளில் வானமும், வானத்தில் இயங்கும் சூரியனும், சந்திரனும், மேகங்கள் வாழ்வின் அர்த்தங்களுக்கும், சுய அனுபவத்திற்கும் படிமக் காட்சிகளாகியுள்ளன.

'எனது தேவைகள்' என்ற கவிதையில் சந்திரனும், சூரியனும் கலைஞனின் படைப்புச் சூழல்களாக வருணிக்கப் பட்டுள்ளன.

''கொஞ்சம் முகம்பார்த்து தலைசீவ ஒரு சந்திரன்
லோஷன் மணக்கும் பாத்ரூம்
என் மனக்குதிரைகள் நின்று அசைபோட ஒரு லாயம்

என் கையெழுத்துப் பிரதியில் கண்ணோட
முகங்கொள்ளும் ஆனந்தச் சலனங்கள்
நான் காண ஒரு பெண்
சிந்திக்கையில் கோத ஒரு வெண்தாடி
சாந்த சூரியன்
லேசான குளிர்
அடிமனத்தில் கவிதையின் நீரோடை''

இக்கவிதையில் பசுவய்யா, பாரதியாரின் காணிநிலக் கவிதையைப் போலத் தேவைகளைக் கேட்டுக் கவிதையின் படைப்பு மனத்தை அடையாளங்காட்டியுள்ளார். பாரதி தேவைகளைப் பராசக்தியிடம் கேட்டார். பசுவய்யா தேவை களை இயற்கைச் சக்திகளிடம் கேட்டுள்ளார்.

'கன்னியாகுமரியில்' என்னும் கவிதையில் மறையும் சூரியனைத் தரிசிக்க, உறவு கொண்டாட, விரும்பிய மனம் தர்க்கத்தால் சூரியனைக் காண முடியாமல் போன காட்சியை,

''இன்று அபூர்வமாய்
மேகமற்ற வானம்
மிகப்பெரிய சூரியன்
ஒரே ரத்தக் கலங்கல்.

எங்கிருந்தோ வந்து
சூரியாஸ்தமனத்தை மறைக்கிறது
இந்த ஆட்டுக்குட்டி
அசடு
அபோதம்
தன்னிலை அறியாதது

இடம் பெயர்வதா ?
நின்ற நிலையில் நிற்பதா ?

மூளையில் தர்க்கம்
அறுபட்டு விழித்ததும்
நகர்ந்தோடியிருந்தது ஆட்டுக்குட்டி
சூரியனைக் காணோம்''

என்று விவரித்துள்ளார். நாம் தர்க்கத்தால் எல்லா வற்றையும் தரிசிக்க முடியாது என்ற கருத்தை இக்கவிதை யில் பிரதிபலித்துள்ளார்.

'மீண்டும் மீண்டும்' என்று கவிதையில் மேகங்கள் வானத்தில் இயங்கும் ஒரு சுதந்திர நதியாக ஓடுகிறது. ஆனால் மழையாக மண்ணுக்கு வரும்போது சுதந்திரம் போய் நீர்த்தேக்கமாய் முடக்கப்பட்டும், சிறைவைக்கப்பட்டும் இறுதியில் கடலோடு கடலாகச் சங்கமிக்கிறது. இந்தக் காட்சியைச் சொல்ல வரும் பசுவய்யா.

''மேகங்கள் வானத்தில் பறக்கும் நதி
இது சரிதான்.
இவற்றின்
பொருள் என்ன?
சுதந்திரம்
கலப்பற்ற சுதந்திரம்

மண்ணுக்குத் தெரியும்
இன்று இல்லையெனில் நாளை அல்லது மறுநாள்
குளிர்ந்து துளி துளியாய்த் தெறித்து
தன்மீது வரும் என்று''

''கால் விலங்கு கைவிலங்குடன்
உழைத்து உபயோகப்பட்டு நாறிப் போனதும்
அதற்கு மறக்கும்.
பின்கடலோடும் கடல்

பின் மீண்டும்
வான வெளியில்
பிறக்கும் நதி''

என்று அடையாளப்படுத்துகிறார். இதில் மேகங்களைச் சமூகமாகவும், நதியை சமூக இயக்கமாகவும் பார்க்க முடிகிறது.

'ஒரு நிலவுக்குக் காத்திருத்தல்' என்ற கவிதையில் புதிய வாழ்க்கையைத் தேடும் மன ஆசையைச் சொல்ல வரும் கவிஞர்,

இந்த வீட்டில் நான் குடியிருக்க விரும்பவில்லை
இந்தப் பாதைகளில் நடக்கவும் என்னால் முடிவதில்லை
இங்குக் காற்று சதா புழுதியைக் கிளப்பிக்
கொண்டிருக்கிறது
குழந்தைகள் மோசமாகச் சத்தமிடுகின்றன
பறவைகளின் மௌனம் என்னைச் சங்கடப்படுத்து
செடிகளோ மரங்களோ பூப்பதில்லை இங்கு. [கிறது
கடலோரம் அதிக தூரம் இல்லை என்றார்கள்
இரவு விடாது நடந்தால் விடியப்போய்ச் சேரலாம்
என்றார்கள்
நான் காத்து கொண்டிருக்கிறேன் இப்போது
ஒரு நிலவு நாளுக்கு

என்பதில் இருண்ட வீடும்,மோசமான சமூக மரபும்கொண்ட சகிக்கமுடியாத வாழ்க்கையில் சங்கடப்படும் மனிதன் புதிய வாழ்க்கைக்குரிய வெளிச்சமாக 'நிலா நாளைத்' தேடு கிறான். இதில் பசுவய்யாவுக்கு இயற்கையோடு மிகுந்த உறவு கொண்டாடும் மன உணர்வை,

''பறவைகளின் மௌனம் என்னைச் சங்கடப்படுத்து
செடிகளோ மரங்களோ பூப்பதில்லை இங்கு'' [கிறது

என்று குறிப்பிட்டிருப்பதால் அறியமுடிகிறது. இதற்குள் இயற்கையைக் காப்பாற்றும் ஆன்மநேயமும் தொனிக் கிறது.

உன்னதங்களைப் படைக்க விரும்பும் மனிதன் அலங் காரத்துக்குள்ளும், ஆடம்பரத்துக்குள்ளும், தேவையில்லாத சாகசங்களுக்குள்ளும் ஆசைப்பட்டு அவதிப்படுகிறான். அவனுக்கு அடிப்படைத் தேவைகளை நிறைவேற்றத் தெரியவில்லை. இப்படிப்பட்ட உலகத்தைப் பார்த்த பசுவய்யா மனிதர்களை 'இந்த உலகம்' என்ற கவிதை யில் அடையாளங்காட்டிக் கிண்டலும் செய்கிறார்.

''வானம் வந்திறங்கும் போது இளைப்பாற
மேகத்தால் ஒரு கட்டில் செய்தேன்
காலை இளங்கதிர்களைக் காட்டி
அவற்றின் ஒலியால் இசை செய்து
கட்டில் அருகே வைத்தேன்
விண்மீன்களை அள்ளியெடுத்து
தெருவெங்கும் இறைத்து வைத்தேன்
கடுந்தவத்தின் முடிவில்
வானம் வந்திறங்கிற்று
சயனிக்க வேணும் என்றேன்
கழிப்பறை எங்கே
என்று கேட்டது வானம்''

இக்கவிதையில் மண்ணில் வானத்தை வசப்பட வைக்கும் மனிதசக்தி தேவையற்றதைச் செய்தும், தேவையான வற்றைச் செய்யாமலும் செயல்படும் நிலையைப் புலப் படுத்தியுள்ளார். இதில் வானம், ஒரு உன்னதமான கனவுக்குக் குறியீடாகி விடுகிறது.

ஆரவாரமும், இயந்திரகதியும் நிறைந்த உலகில் இயற்கையோடு இயைந்து அமைதியான ஒரு வாழ்வின் ஏக்கத்தை 'உயிரின் ஒளி' என்ற கவிதையில் சூரியன், சந்திரன், பூமி ஆகிய மூன்றின் படிமக் காட்சிகளில் உணர்த்தியுள்ளார்.

''அறிவேன் சூரியனின் ஆக்கத்திறன்
அவனே வாழ்வின் கருப்பை என்பதையும் அறிவேன்
இருப்பினும் சந்திரனும் எனக்கு முக்கியம்
சூரியனைப் போல் சந்திரனிடம் ஒளியில்லை
எனக்கு விசனம் உண்டு என்றாலும் [என்பதில்
சந்திரன் பிரதிபலிக்கும் அந்த ஒளி
அதன் தன்மை
அதன் மஞ்சள்
நெஞ்சை அள்ளும் அதன் அழகு
குழந்தைகளை அது வசீகரிக்கும் விதம்

காதலிகளுக்கு அது அளித்துவரும் ஊக்கம்
இவை எனக்கு முக்கியம்.

பூமி மீது எனக்குப் பிரியமில்லாமல் இல்லை
இங்கு வீசும் காற்றும் இங்கு சுரக்கும் நீரும்
சந்திரனில் இல்லை என்பதை அறிவேன் என்றாலும்
காற்று நீரும் உண்டு சுடர்விடும் என்உயிர்
சந்திரனுடன் உறவாடும் போது மட்டுமே
தன் ஒளியைப் பரப்பத் துடிக்கிறது''

என்பதில் அமைதியான, அன்புடைய வாழ்க்கையைச் சந்திரனின் உறவாக அழகு தரிசனமாகப் பசுவய்யா தன்னுடைய சுய அனுபவ இன்பத்தை வெளிப்படுத்தியுள்ளார்.

இந்தப் பிரபஞ்சத்தில் மனிதக்கூட்டம் சாதிப்பதைச் சப்தம் செய்கிறது என்றும்; ஆனால் சூரியன் காலை முதல் மாலைவரை மௌனத்தோடு இயங்குகிறது என்பதை 'மௌன ஒளி' என்ற கவிதையில் குறிப்பிட்டுள்ளார்.

''இந்த ஒளியின் இயக்கத்தில் ஓசை இல்லை
அதிகாலை ஓசையின்றி நெடுகிலும் பரவி
ம லையில் விடைபெற்றுச் செல்கிறது
இந்த ஒளியின் இயக்கத்தில் ஓசை இல்லை''

இந்தக் கவிதையில் சூரியனின் இயக்கத்தைப் போற்றியுள்ளார். முந்திய 'உயிரின் ஒளி' என்ற கவிதையில் சந்திரனோடு உறவாடும்போதுதான் உயிரில் ஒளி பிறக்கிறது என்று குறிப்பிட்டிருக்கிறார். இங்குச் சூரியனை இயங்கும் சக்தியாகப் போற்றியுள்ளார். அங்கு சந்திரன், அன்பின் சின்னமாகப் போற்றப்படுகிறது. இப்படிப் பாடியது முரணில்லை; முரணுக்குள் கவிஞர் காணும் உண்மைத் தேடல் ஆகும்.

**மரங்கள் :**

இந்த மண்ணில் மனிதர்களின் வாழ்வு பேதப்பட்டுக் கிடக்கிறது. ஆனால் மரங்களின் வாழ்வோ உன்னதமாக

இருக்கிறது இதன் காரணங்களைத் தேடிய கவிஞர் பசுவய்யா, மனிதர்களிடம், மரங்களைப்போல் ஆன்ம நேயம் இல்லை என்கிறார். அவர்கள் இயற்கையை நேசிக்கிற ஒரு ஆன்மநேயம் (வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன்) பெறுகிற பொழுது மனிதர் கள் மரங்களைப்போல் வாழ்வதோடு விருட்ச மனிதர்க ளாகப் பரிணாமம் பெறமுடியும் என்கிறார்.

''மரங்கள் போல் வாழ்வு என்று கிடைக்கும்,
மோனமும் அழகும் அங்குக் கூடி நிற்கின்றன.
கவலை இல்லை
விபத்தும் நோயும் வறுமையும் உண்டு
கவலை இல்லை.
செடிகளின் வறுமையைப்பற்றி யோசித்திருக்கிறோமா?
மிருகங்கள் பறவைகள் புழுக்கள் பூச்சிகள் செடிகள்
இவற்றின் துக்கங்களைப்புற்றி யோசித்திருக்கிறோமா?
இவற்றையும் சேர்த்து யோசிக்கும்போது
நம் கஷ்டங்கள் தீரும்

மனிதனுக்காக ஜீவன்கள் அழித்து கொண்டிருக்கும்
என்னைச் சந்தோஷமாக வை என்று [வரையிலும்
மனிதன் எப்படி யாரிடம் கேட்கமுடியும்?''
(விருட்ச மனிதர்கள்)

இக்கவிதையில் மனிதனின் வாழ்க்கைக்காக எத்தனையோ இயற்கை ஜீவன்களை அழித்துக்கொண்டிருக்கிற வரையில் மனிதர்கள் மரங்களைப்போன்ற வாழ்வைப் பெறமுடியாது என்கிறார். மனிதன் இயற்கையோடு இயைந்து சங்க மித்து ஆன்மநேயத்தோடு வாழும்போது மரங்களைப்போல் உன்னதமாகவும், கம்பீரமாகவும் வாழமுடியும் என்கிற எதிர்பார்ப்பைச் சொல்லவரும் பசுவய்யா,

'மனிதர்கள் மரங்களைப் போல் வாழும் காலம் வரும், என்ற நம்பிக்கையைப் பிரகடனப்படுத்தியுள்ளார். இதில் பசுவய்யாவின் சுற்றுப்புறச் சூழழ் பாதுகாப்பு

உணர்வு வெளிப்படுகிறது. இந்தக் கவிதையில் மரங்களும், மனிதர்களும் முரண்பட்டு வாழும் நிலைகளைப் படிமக் காட்சிகளாக வருணித்துள்ளார்.

## மதிப்பீடுகள் :

பசுவய்யாவின் கவிதைகளில் இயற்கைப் படிமங்கள் ஏற்படுத்திய புரிதல்கள்:

- காற்று: ஒரு புதிய சிந்தனையாகவும், இலட்சியமாகவும் புதிய வாழ்க்கைத் தேடலாகவும். ஒருநித்தியமாகவும் குறியீடு செய்யப்பட்டுள்ளது.
- கடல்: ஒரு விசுவரூப சக்தியாகவும், மாறி மாறி இயங்கும் பிரபஞ்சமாகவும், இயற்கையின் வடிவமாகவும் காட்டப்பட்டுள்ளது.
- வானம்: ஒரு உன்னதமான கனவாகவும், பிரபஞ்சத்தின் குறியீடாகவும் சொல்லப்பட்டுள்ளது.
- சூரியன்: இயற்கையின் ஆக்கச் சக்தி, மனிதப்பண்பு, இயங்குசக்தி எனச் சொல்லப்பட்டுள்ளது.
- சந்திரன்: மனிதனின் படைப்பாற்றல், அன்பு, அழகு ஆகியவற்றின் அடையாளம் இது.
- மேகங்கள்: இயங்கும் சக்தியின் குறியீடு
- மரங்கள்: உன்னதமானவை இயற்கையை வாழ வைப்பவை, ஆன்மநேய மிக்கவை.
- படிமக் காட்சிகள்: குறியீடு — வருணனை. முரண் அமைப்பு — வாசக அனுபவத்துக்கேற்ப புரிதலும் — அர்த்தமும் வேறுபடும்.

இக்கட்டுரையில் பசுவய்யாவின் இயற்கைப் படிமங்கள் ஏற்படுத்திய புரிதல்கள் ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள் மட்டுமே சொல்லப்பட்டுள்ளன. இதில் இன்னும் விரிவான, விளக்கமான ஆய்வுக்களங்கள் நிறைய உள்ளன. ●

என் அந்தரங்கமே !
இதோ, என் சொல்லோவியம்
நம் உள்ளப் புணர்ச்சிக்குப்
பிறந்த உயிரோவியம்
உன் காலடியில் வைக்கிறேன்.
விசுவாமித்திரனைப் போல் வேண்டாம்
என்று சொல்லி விடாதே.

— மீரா.

# 4. தொன்மக் குறியீடும் கருத்து மாற்றமும்

புதுக்கவிதை, சமகால வாழ்வைப்பாடும் ஒரு சுதந்திர மான வடிவமாகும். கவிதை என்பது ஒரு படைப்புக்கலை முயற்சியாகும். கவிஞனை, மானுடத்துக்கு முகவரி எழுதும் சூரியன் என்றும், இம்மண்ணின் விலாசத்தை விலாசப் படுத்துகிறவன் என்றும் குறிப்பிட்டுள்ளனர். காரணம் காலம் கொடுக்க முடியாத நம்பிக்கையை ஒரு கவிஞன் கொடுப்பான். அதனால்தான் தெலுங்குப் பழமொழி,

ஒன்று 'ரவி காணாததைக் கவி காண்பான்' என்று முன் மொழிந்துள்ளது. இக்காலப் புதுக்கவிதைகள், வாழ்வின் பிரமையை உடைத்து உண்மையைச் சொல்லி வாழ்வை அர்த்தமாக முயன்றுள்ளன. ஒரு கவிஞன் கவிதையைப் படைக்க அரசியல், சமூகம், சமயம், புராணம், வாழ்க்கை, பண்பாடு, இலக்கியம், வரலாறு போன்ற பின்னணிகள் மட்டும் போதாது; அத்தோடு கலைத்திறனும் இருக்க வேண்டும். இக்கலைத்திறனை உருவாக்கவும், சொல்ல வந்த கருத்தை வலுவாக வெளிப்படுத்தவும் கவிஞர்கள், படைப்பு முறைகளைப் பயன்படுத்தியுள்ளனர். கவிஞர்கள், பலவகையான குறியீடுகளைப் பயன்படுத்திக் கவிதை களைப் படைத்துள்ளனர். இப்படைப்பு முறைகளில் புதுக் கவிஞர்கள் பயன்படுத்தியுள்ள தொன்மக் குறியீடுகளும், அவற்றில் ஏற்படுத்தியுள்ள கருத்து மாற்றங்களும் இக் கட்டுரையின் மையக் கருத்துக்கள்.

## தொன்மம் :

புதுக்கதைகளில் குறியீட்டுக் கவிதைகள் மிகுதியாக உள்ளன. இக்கவிதைகளில் குறியீடு என்பது. ஒரு படைப்பு முறையாகப் பயன்படுத்தப் பட்டுள்ளது. கவிஞர் கள் தாம் சொல்லவரும் கருத்தை அறிவுறுத்த அறிந்த பொருள்களைக் குறிப்படுத்தியுள்ளனர்.

கவிஞர்கள், கவிதையில் அழகும், அர்த்தமும் வெளிப் பட படைப்புமுறைகளைப் பயன்படுத்தியுள்ளனர். இப் படைப்பு முறைகளில் உலகமரபு, இந்திய மரபு, தமிழ் மரபு ஆகியவை கலந்தும் படைத்துள்ளனர். இப்படைப்பு முறைகளில் மரபும். மரபு மாற்றமும் நிலவுகின்றன. இந்திய நாட்டில் பழம்பெரும் புராணங்களின் பின் னணியும், சமய வாழ்க்கை முறையும் இரண்டறக் கலந்து நிலவும் போக்கு மக்களிடையே காணப்படு கின்றன. இப்போக்கை உணர்ந்த கவிஞர்கள் அன்று முதல் இன்றுவரை புராணக் கருத்தாகிய தொன்மத்தைக் குறியீடுகளாகப் பயன்படுத்தியுள்ளனர்.

எல்லா நாட்டின் கவிதைப்படைப்பிலும் இத்தொன்மக் கூறு, மரபோடும், புதிய பரிணாமப் பொருளோடும் காணப் படுகின்றன. அதேபோல் இந்தியத் தொன்மங்களாகிய பாரதம், இராமாயணம், உலகத் தொன்மமாகிய விவிலியம் படைப்பு முறைக்குப் பெரிதும் பயன்பட்டுள்ளன இவற்றைக் கவிஞர்கள் தாம் சொல்லவந்த கருத்துக்கேற்பச் சமகால வாழ்வைப் பிரதிபலிக்கத் தொன்மக குறியீடுகளைத் தேவை யான இடங்களில் மாற்றியும், புதுப்பொருள் கற்பித்தும், மதிப்பிழக்கச் செய்தும் பயன்படுத்தியுள்ளனர். புதுக் கவிதைதளில் காணும் தொன்மக் குறியீடுகளும் அவை பெற்றுள்ள மாற்றங்களுக்கும் சில சான்றுகள் இங்கு எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

கவிஞர் சிற்பி 'சர்ப்ப யாகம்' என்னும் கவிதையில் தேசத்தை நாசப்படுத்தும் நச்சு மனிதர்களை நச்சுப் பாம்புகளாகக் குறியீடாக்கியுள்ளார்.

"பரம பதத்துச்
சோபன படம்
எங்கள் தேசம்
அதில்
சட்டங்கள் தோறும்
நச்சுப் பாம்புகள்
காத்துக் கிடக்கின்றன"

இதில் சோபன படம் தேசத்திற்கும், கட்டங்கள் ஒவ் வொரு மாநிலத்திற்கும் குறியீடுகளாகியுள்ளன. இந்த நச்சுப் பாம்புகளைக் கொல்ல மக்கள் சக்தியால் சர்ப்ப யாகம் என்னும் வேள்வியை நடத்துகிறார்.

நாகங்கள் அழிக்கும்
யாகங்கள் தொடங்கினோம்
கொடிய சர்ப்ப யாகம்!
எமது சர்ப்ப யாகத்தில்

சிறியது - குறிபது
பெரியது - நெடியது.

பூநாகம் முதல் பொறி நாகம் வரை.

எரியும் - எரியும்
கரியும் - கரியும் !

இச்சர்ப்ப யாகத்தில் 'மக்கள் புரட்சி' என்னும் வேள்வி தான் நாட்டை நாசப்படுத்தும் எல்லாவகையான ஆதிக்க சக்திகளையும் அழிக்க முடியும் என்ற நம்பிக்கையை நமக்குத் தந்துள்ளார். அத்தோடு இவ்வேள்விதான் நமக்கான வாழ்வைத்தரும் 'பரம பதம்' என்றும் குறியீடு செய்துள்ளார். மக்கள் சக்தியைப் போற்றும் இம்மக்களாட்சியில் மக்களால் எதையும் வெல்லவும் முடியும் ; புதிய சரித்திரம் படைக்கவும் முடியும் என்னும் கருத்தை வலுப்படுத்தியுள்ளார் சிற்பி.

'' அந்த
எரிதழற் சாம்பலில்
ஒரு
பரம பதத்தை
எங்கள்
சிரம பதத்தால்
சிருஷ்டித்துக் கொடுப்போம்.
ஏனெனில் இது
'ஜனமே ஜய'
யுகம்''

இக்கவிதையில் 'பரம பதம்' என்ற வைணவ மரபை இக்காலத்துக்குத் தேவையான 'புதிய வாழ்வு' என்ற புதிய பொருளில் குறியீடாக்கியுள்ளார். இக்கவிதையில் கவிஞர் அரசியல், சமூக விமரிசனத்தை மிகக் கூர்மையாக்கியுள்ளார். அத்தோடு நாட்டைக் கெடுக்கும் நச்சு மனிதர்களை அடையாளங்காட்டி அவர்களை அப்புறப்படுத்த மக்கள் சக்திக்குப் போராடும் வலிமையையும் நம்பிக்கையையும் ஊட்டியுள்ளார் கவிஞர்.

உலகில் அன்று முதல் இன்றுவரை நாட்டில் நடக்கும் போரின் காரணத்தைப் பாடவந்த நகுலன்,

''அன்று முதல் இன்றுவரை
இராம- இராவண யுத்தம்
சீதை நிமித்தம்''

என்று பாடியுள்ளார். இதில் சீதை, பெண் என்ற பொதுப் பொருளிலும், திருமகளின் அவதாரம் என்பதால் செல்வம் என்றும், சனகனால் நிலத்திலிருந்து கண்டெடுக்கப் பட்டவள் என்பதால் நிலம் என்ற பொருளும் தந்து போர்க்குரிய காரணங்களை எல்லாம் நகுலன் குறிப் படுத்தியுள்ளார். 'அன்று முதல் இன்றுவரை' என்பதால் 'யுத்தம்' பலநிலைகளில் நடைபெறுகிறது என்பதை உணர்த்துகின்றார். அதனால் சீதை, இராமன், இரா வணன் ஆகியோர் போருக்குரிய காரணங்களின் குறிக ளாக மாற்றம் பெற்றுள்ளனர்.

'' சுதந்திரச் சீதை
மீட்பின் பின்னும்
சிறையிருக்கின்றாள்
அசோகவனத்தில் அல்ல.
ஆரோ சிலரின்
அந்தப்புரத்தில்''

என்ற கவிதையில் வைரமுத்து, சீதையை ஒரு விடுதலைப் பொருளாக்கி. அது மீட்சிக்குப் பிறகும் பணநாயகத்துக் குள் சிறையிருப்பதைச் சுட்டிக்காட்டியுள்ளார். இதில் சீதையை ஒரு பாரம்பரிய மரபைவிட்டு விலக்கி இக்கால அரசியல் வாழ்வைச் சொல்லக் குறிப்படுத்தியுள்ளார்.

மேத்தா, இக்காலப் பெண்களின் கொடுமையான வாழ்வு நிலையைப் பாடும்போது,

''இன்னலிலிருந்து
இன்றைய சீதைகளை

இராமர்களின் வில்லாற்றல்
எதுவும்
விடுவிக்க முடியாது
காரணம்
அன்றைய இராவணன்
சீதையை
பலாத்காரமாகக்
கடத்திச் சென்றான்
நவீன இராவணமார்களோ
சீதைகளைப்
பக்குவமாகக் கடத்திச் செல்லுகிறார்கள்
திருமணம் செய்துகொண்டு''

என்று கவிதையாக்கியுள்ளார். இதில் இராமன் மதிப்பிழந்தும், இராவணன், சீதைபுதுப்பொருளிலும் பயன்படுத்தப்பட்டு மாற்றமடைந்துள்ளனர்.

ஒரு கல்லின் கதையும் கவியின் விமர்சனமும் என்ற கவிதெயில் மேத்தா, இந்திரனால் கெடுக்கப்பட்டுக் கௌதமனின் சாபத்தால் கல்லான கதையை விவரித்து, இக்காலப் போக்கையும் விமர்சித்துள்ளார்.

'கானகத்தின் பாழ்வெளியில்
காத்திருக்கும் கல் ஒன்று
காலொன்று படுவதற்குக்
காலம் வரவேண்டுமென்று'

சாப விமோசனத்துக்காகக் காத்திருக்கின்றாள்.

'கால்கள்பட்ட
காரணத்தாலே
உயிர்பெற்ற கல்
உயர்திணையாய் மாறியது'

என்பதில் கல் என்பது அகலிகைக்கும், கால் என்பது இராமனுக்கும் குறியீடுகளாக வந்துள்ளன. புராண காலத்து இராமனின் கால்பட்டதால் கல் உயர்திணைப்

பெண்ணாக உயர்கிறாள். இந்த நினைவுகளோடு இக்காலப் பெண்களின் நிலையை விமர்சனம் செய்துள்ளார் மேத்தா.

'நவீன இராமர்களின்
கால்கள்
அன்றாடம் மிதிக்கின்றன.
அபலைகளை
குடும்பத்தின்
குத்துவிளக்குகள்
குத்துக் கல்லாகின்றன'

இதில் நவீன இராமர்கள் கொடுமைப்படுத்தும் இக்கால ஆண்களுக்கும், குத்து விளக்குகள் குடும்பப் பெண்களுக்கும், குத்துக் கல் கொடுமைக்குள்ளான பெண்களுக்கும் குறியீடுகளாக வருகின்றன. இதில் இராமன் தாழ்வு நிலையைப் பெறுகிறான். உயர்திணையாகிய பெண்கள் அஃறிணையாகிய கல்லாக்கப்படுகின்றனர்.

மார்க்சீயச் சார்புடைய கவிஞர் இன்குலாப்,

''வெள்ளி விழா மண்டபத்தில்
விடுதலைத் தேவதையைப்
பாண்டவர்களும்
துரியோதனாதிகளும்
பங்கு போடும் வேளையில்''

என்ற கவிதையில் இந்திய விடுதலையின் போக்கைச் சுட்டிக்காட்டியுள்ளார். இதில் வந்துள்ள தொன்மங்கள் பழைய மதிப்பையும், குறியீட்டுத் தன்மையையும் இழந்து புதுப் பொருள்களில் செயல்படுகின்றன. இதில் பாண்டவர்களையும் தீயவர்களாக்கி மதிப்பிழக்கச் செய்துள்ளமை குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

'எண்ணிக்கையே தர்மமாகிய
குருஷேத்திரத்தில்
வெற்றிகளெல்லாம்

கௌரவர்களுக்கே
போய்ச்சேருகின்றன,

என்ற கவிதையில் அப்துல்ரகுமான், அதிக வாக்குப்பெறு தலே வெற்றி என்ற தர்மத்தைக் கண்டனம் செய்யத் தொன்மங்களைத் திரித்தாண்டுள்ளார்.

'நீதி தேவதையே
உன் தராசுத் தட்டுக்களைக்
கொஞ்சம் கண் திறந்துபார்.
அங்கே,
புறாவின் மாமிசத்தைச்
சிபிகள் உண்ண ஆரம்பித்து விட்டார்கள்'

என்ற கவிதையில், சிபி பற்றிய தியாக மரபை மாற்றி மதிப்பிழக்கச் செய்து இக்கால நீதிநிலையைக் காட்டச் சிபிகளை அநீதியாளர்களாக அடையாளங் காட்டியுள்ளார் அப்துல் ரகுமான். இக்கருத்தைத் தமிழன்பன்,

''தரும தேவதை
தினக்கூலி வாங்கிக் கொண்டு
திசைகளுக்குக்
கறுப்பு அடிக்கப் போய் விட்டாள்''

என்றும் குறிப்படுத்தியுள்ளார்.

தருமு - சிவராமு, 'குருஷேத்திரம்' என்ற கவிதையில் கீதா உபதேசத் தொன்மத்தில் பல அடிப்படை மாற்றங் களைச் செய்துள்ளார். இதில் முதலாளி (தொழிலாளி வர்க்கம் பேசப்படுகிறது. 'கடமையைச் செய்; பலனை எதிர்பார்க்காதே' என்று உபதேசித்து விட்டுக் காரில் ஓடப்பார்க்கும் முதலாளி கண்ணனுக்குக் கல்லடி விழு கிறது. இக்கவிதையில் பழங்குறியீடுகள், சொல்லவந்த வர்க்கப் போராட்ட நிலையைக் காட்டும் வண்ணம் மாற்ற மடைந்துள்ளன.)

'அது ஒரு கல்வெட்டு' என்ற கவிதையில் கவிஞர் வைரமுத்து அகலிகையைப் பார்த்து இக்காலப் பெண்ணின் வாழ்வுக்கும், உரிமைக்கும் குரல் எழுப்பியுள்ளார்.

''இந்த
ஆண் இராமர்கள்
அத்தனை பேரும்
கல்லாய்க் கிடக்குமுன்னைப்
பார்த்து மறைத்து
தம்
பாதம் மறைத்துப்
பல்லக்கில் ஏறிப்
பயணம் போகையில்

ஏடி அகலிகை !
எப்போதடி பெண்ணாவாய் ?

என்று அகலிகையை விளித்துப் பேசுவதுபோல் ஓர் உரையாடல் கவிதையை அமைத்துள்ளார். இதில் ஆண் ராமர்களை இக்கால ஆண் ஆதிக்க வர்க்கமாகவும், கல்லை விமோசனம் அடையாத பெண்ணின் பிரதியாகவும், குறியீடுகளாக்கியுள்ளார். இதில் அன்றைய இராமன் சபிக்கப்பட்ட கல்லைப் பெண்ணாக மீட்டுருவாக்கினான். ஆனால் இன்றைய ஆண்கள், பெண்களின் வாழ்வுக்கும், உரிமைக்கும் விமோசனத்தைச் செய்யாமல் கொடுமைப் படுத்திவரும் சமூகச் சூழலை விவரித்துள்ளார்.

கம்ப ராமாயணத்தில் அசோக வனத்தில் சிறையிருந்த கற்பின் கனலி சீதையை இராமன் மீட்கிறான். இக்கதையின் பின்னணியில் இக்காலச் சமுதாயத்திலுள்ள பெண்கள் சோகவனத்தில் காகுத்தனுக்காகக் காத்திருக்கும் ஏக்கத்தைக் கவிஞர் பாலா.

''காத்திருக்கின்றாள் சீதை
காகுத்தன் வருவானா என
எப்படியும் வரும் நாளையென

ஏக்கங்களில் நிச்சயமற்ற குழப்பங்களில்
காத்திருக்கின்றாள் சீதை
காகுத்தன் வருவானாவென''

என்று கருத்துமாற்றம் செய்துள்ளார். இதில் மணமாகாத பெண்களின் அவலக்குரல் தொனிக்கிறது இக்கவிதை யில் சீதை, இக்காலப் பெண்ணுக்கும், காகுத்தன் இக்கால அணுக்கும், சோகவனம் கொடுமை நிறைந்த சமூகத் துக்கும் குறியீடுகளாகியுள்ளன.

தொன்மக் கூறுகளில் ஒன்றான அகலிகையும் புதுக் கவிதையில் பலமுறைகளில் புதிய நோக்கில் பயன்படுத்தப் பட்டுள்ளாள். சிற்பி, 'அகலிகை இன்னும் காத்திருக் கின்றாள்: என்னும் கவிதையில் அகலிகை மாத்திரமல்ல : பெண் குலமே ஆடவர்களின் கல்நெஞ்சத்திலிருந்து இன் னும் விடுதலை பெறவில்லை என்ற கருத்தை வலியுறுத்தி உள்ளார். இதேபோல் ஞானி 'கல்லிகை' என்ற நெடுங் கவிதையில் அகலிகை. அடிமைப்படுத்தப்பட்ட மனிதகுல மாக உருவகப்படுத்தப்பட்டுள்ளாள். இதில் கௌதம முனிவரையும், இந்திரனையும் அடக்கியாளும் வர்க்கத்தின் சார்பாளராகக் குறிப்படுத்தியுள்ளார். இதில் அகலிகை யைப் புராண மரபில் நோக்காமல், அவளை ஒரு வர்க்கச் சார்பு நோக்கில் ஞானி படைத்துப் புதுமைப் பொருளைச் சமகால நோக்கத்தில் சொல்லியுள்ளார்.

விவிலியத் தொன்மத்தையும் புதுப்பொருளில் அப்துல் ரகுமான், புவியரசு, வேலுச்சாமி போன்ற கவிஞர்கள் புதிய வாழ்வுத் தேடலுக்காகப் பயன்படுத்தியுள்ளனர்.

ஏசுபிரான் மனுக்குலத்திற்காகச் சிலுவையில் அறை யப்பட்டுத்தன் குருதியைச் சிந்தினார் என்பது விவிலியம் கூறும் கருத்தாகும். இக்கருத்தின் அடிப்படையில் கவிஞர் அப்துல்ரகுமான் தன்னுடைய ஆறாவது விரலாகிய எழுது கோலின் வாயிலாகத் தன் சிந்தனைக் குருதியைச் சமு தாயத்திற்குக் கவிதையாகப் படைத்ததை,

'என் ஆறாவது விரல் வழியே
சிலுவையிலிருந்து
வடிகிறது ரத்தம்
ஆம்–
என் 'மாம்சம்' வார்த்தையாகிறது'

என்று பால்வீதியின் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார்.

ஆதியிலே தேவனிடத்திலிருந்த வார்த்தை மனித குலத்திற்காக 'மாம்சமாகிய' எசுவாக அவதாரம் செய்கிறார். மாம்சமாகிய கவிஞரிடமிருந்து வார்த்தையாகிய கவிதை பிறந்தது என்பதில் விவிலியக் கருத்து மாற்றம் அடைந்துள்ளது. மாம்சம் என்பது கவிஞருக்கும், வார்த்தையென்பது கவிதைக்கும் குறியீடுகளாக்கப்பட்டுள்ளன.

'' அறையப் படுவதற்காக
நீ அவதரிக்கவில்லை
ஆளுயரச் சிலுவைகளை
அப்புறப்படுத்து
அல்லது
ஆணியில் மாட்டு ''

என்ற இரா. வேலுச்சாமியின் கவிதையில் சாதி, சமயம், இனம்போன்ற கொடுமைச் சுமைகளை நீக்கிப் புத்துலகைப் படைக்கப் போராட வேண்டுமென்ற நோக்கில் விவிலியத் தொன்மத்தைத் திரித்துக் கவிதையாக்கியுள்ளார்.

இதேபோல கிரேக்கத் தொன்மங்களைத் தருமு சிவராமு நா. காமராசன், வைரமுத்து போன்ற கவிஞர்களும் பின்பற்றியுள்ளனர்.

புதுக்கவிஞர்கள், கவிதைப் படைப்புக்கு இந்தியத் தொன்மக் கூறுகளையும், விவிலிய, கிரேக்கத் தொன்மங்களையும் சமகால வாழ்வுக்குரிய முறைகளில் மாற்றிப் புதிய பரிணாமப் பொருள்களில் பயன்படுத்தியுள்ளனர். படைப்பு முறையிலுள்ள தொன்மக் கூறுகளுக்குச் சில மாதிரிகள் மட்டும் இக்கட்டுரையில் சொல்லப்பட்டுள்ளன. புதுக்கவிதைகளில் காணும் இன்னும் வேறுவகையான குறியீடுகளையும் கண்டு பொருள் மீட்பைச் செய்யலாம். ●

கடற்கரையில் நாம் பழகிய
பொழுதுகளை நினைத்துப் பார்!
அன்று நீ பேசிய வார்த்தைகள்
கடற்கரைக் கூட்டத்தில்
கட்சிகள் வழங்கும்
உறுதிபோல்
காற்றில் கரைந்து விட்டன.

—கௌதமன்

## 5. நவீன உவமை

தமிழுக்குப் பழமையான இலக்கியமும், புதுமையான இலக்கியமும் வளம் சேர்த்த களங்கள். இலக்கியத்தில் புதிய முயற்சிகள், சோதனைகள் தோன்ற மரபு இலக்கியங்களும் முன்னோடியாக இருக்கின்றன. ஒரு படைப்பாளன் தான் வாழும் காலத்தை, மக்கள் சமூகத்தைக் கலை வடிவில் பிரதிபலித்துக் காட்டும் ஆன்மா என்பர். இப்படைப்பு ஆன்மாக்களில் காலந்தோறும் ஏற்பட்ட மாறு

பாடுகளையும். வெளிப்பாடுகளையும் திறனாய்வாளர்கள் தரம் பிரித்துள்ளனர். இருபதாம் நூற்றாண்டில் தோன்றி யுள்ள இலக்கியப் படைப்புகளைத் தற்கால இலக்கியம் (Modern Literature) என்று கூறுவர். தற்கால இலக்கியங்களின் உள்ளடக்கமும் (Content) வெளிப்பாட்டு (Expression) முறையும் நவீனத்துவம் பெற்றுள்ளமையைப் புதினம். சிறுகதை, புதுக்கவிதை. கட்டுரை முதலிய இலக்கிய வடிவங்கள் வெளிப்படுத்துகின்றன. இக்கட்டுரை யில் புதுக்கவிதைகளில் உவமை நவீன முறையில் வெளிப் படுத்தியுள்ள திறன் மட்டும் ஆராயப்பட்டுள்ளது.

புதுக்கவிதை வரலாற்றில் 1970க்கு முன், 1970க்குப் பின், என்றிரு காலகட்டங்கள் முதன்மை வாய்ந்தவை. இன்றைய புதுக்கவிதைகள் பெற்றுள்ள இலக்கியத் தரத் தைச் சமகால இலக்கியப் போக்கினை நன்கு அறிந்த படிப் பாளிகள் உணர்வர். இக்கவிதைகளில் உள்ளடக்கம் மட்டு மின்றி வெளிப்படுத்தியுள்ள முறைகளிலும் புதிய உத்திகள் பலவுண்டு, அதில் நவீன உவமையும் ஒன்றாகும். புதுக் கவிஞர்கள் மிகுதியாகப் படிமத்தையும், குறியீடுகளையும் கையாண்டுள்ளனர். இக்கவிதை முயற்சிகளில் படிமம் மேலோங்கியுள்ளது. உவமைக்கவிஞர் சுரதா என்பது போல் படிமக் கவிஞர் அப்துல் ரகுமான், சிற்பி, அபி, பசுவய்யா, ஞானக்கூத்தன் முதலான பல புதுக் கவிஞர் களைக் குறிப்பிடலாம். ஆனால் உவமைக் கவிஞர் என்று சிறப்பாகப் புதுக்கவிஞர்களில் ஒருவரையும் குறிப்பிட முடியாத வண்ணம் படிமம் ஆட்சி பெற்றுள்ளது. புதுக் கவிதைகளில் எதார்த்தவாதத்தைச் சிறப்பான முறையில் கையாண்டு சமூகத்தைச் சரியாக விமர்சனம் செய்தவர் களின் படைப்புக்கள் இக்காலத்தின் தனிக்கவனத்தைப் பெற்றுள்ளன. ‘மனிதப்படுத்துவது இலக்கியம்’ என்ற வாக்கு மூலத்தைப் புதுக்கவிதைகள் நியாயப்படுத்து கின்றன.

இலக்கியப்படைப்பில் அன்றுமுதல் இன்றுவரை உவமை (Simile) என்பது ஒரு இலக்கிய உத்தியாகும். உவமையில் வெளிப்பாடு ஒவ்வொரு காலத்திற்கேற்ப இலக்கிய வடிவங்களில் வெளிப்பட்டுள்ளது. 'நிலாப்போல் முகம்' என்பதில் உவமையாக வந்துள்ள நிலா, முகத்தின் சிறப்பை மட்டும் உணர்த்துகின்றது. இதில் நிலா வேறு எந்தக் கருத்தையும் வெளிக்காட்டவோ பிரதிபலிக்கவோ இல்லை. இதைத் திறனாய்வாளர் அழகியநோக்கு என்பர்.

புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் நீலவாவில் காணும் நிலாவின் இன்பத்தைச் சொல்லும்போது

"..... ..... நித்தியதரித்திரராய் உழைத்துழைத்துத்
தினைத்துணையும் பயனின்றிப் பசித்த மக்கள்
சிறிதுகூழ் தேடுங்கால் பானை ஆரக்
கனத்திருந்த வெண் சோறு காணும் இன்பம்
கவின் நிலவே உனைக் காணும் இன்பந்தானோ"

என்று பாடியிருப்பது உவமையின் அடுத்த கட்ட வெளிப்பாடு. இதில் பாரதிதாசன் நிலா பற்றிய கற்பனைகளை அடுக்கினாலும் இறுதியில் அந்நிலாவின் இன்பத்திற்கு இம்மண்ணின் உழைப்பாளிகள் பசித்த மக்களாக இருக்கும் எதார்த்த நிலையைச் சொல்லியுள்ளார். இதில் பசித்த மக்கள் கூழ் தேடப்போய் வெண்சோறு கண்ட போது பெற்ற இன்பத்தை, நிலாவைக் காணும் இன்பத்தோடு உவமைப்படுத்தியுள்ளார்.

புதுக்கவிஞர்கள் தம் கவிதைகளில் கையாண்டுள்ள உவமைகள் உவமையாக மட்டுமில்லாமல் இவ்வுவமைகள் தனித்து நின்றும் சமகாலச் சமூகத்தைப் பிரதிபலிக்கும் தன்மை கொண்டவை. 'ரத்தாகும் பந்தங்கள்' என்கிற கவிதையில் கவிஞர் அக்னிபுத்திரன் தேசத்தையும், காதலையும் ஒப்பிட்டுள்ளார்.

''காதலியை விட்டுக் கொடுத்ததைப்போல
தேசத்தை விட்டுக் கொடுக்க முடியாமல்
நான் நிமிரக் காரணம்
எனக்கு இருப்பது
ஒரே தேசம்''

இக்கவிதையில் காதல், இம்மண்ணில் இன்னும் தோல்வி மட்டுமல்ல, சில நேரங்களில் விட்டுக்கொடுக்கப் படுவதை அங்கதச் சுவையில் உவமையாகக் காட்டப் பட்டுள்ளது. காதலியை விட்டுக்கொடுப்பதைப்போல் இந்தத் தேசத்தைச் சிலருக்காக விட்டுக் கொடுக்காமல் நமக்கான ஒரே தேசத்தைச் நாம் மீட்டவேண்டும் என்பது சரியான உந்துசக்தியாக வெளிப்பட்டுள்ளது.

கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள் பாடிய கவிஞர் மீரா, காதல் நினைவுகளில் சமூக உணர்வுகளை நினைவுபடுத்துகின்றார்.

''நீ எனக்குக் காதலைத் தந்தாய்
இது உழைப்பாளியின் வியர்வையைப்போல்
உயர்வானது',.

இதில் கவிஞர் மீரா உழைப்பாளியின் உழைப்புஎவ்வளவு உயர்வானதோ அதுபோல காதலும் உயர்வானது என் கிறார். இதில் காதலைக் கற்பனா வாதத்துடன் வருணனை செய்யாமல் மண்ணில் நாளும் உழைப்பை வியர்வையாகச் சிந்தும் மக்கள் நிலையை எதார்த்தமாக்கியுள்ளார்.

''பல நாட்கள்
உன் பின்னால் வரும்
கூலிக்காரனைப் போல்''
''நிலப்பிரபுத்துவத்தின்
நீசக்கரத்தில் சிக்கிக்கிடக்கும்
கூலி விவசாயிகள் குடும்பம் போல்

வெந்து பொசுங்கும்
என் மேனியைப்பார்''

இக்கவிதைகளில் காதல் உணர்ச்சிக்கு இச்சமூகத்தின் கூலி விவசாயியின் வாழ்வு உவமையாக்கப் பட்டுள்ளது. இதில் காதல் உணர்வும் கூலிக்காரன் வாழ்வும் உணர்ச்சியின் சுவடுகளாக வெளிப்பட்டுள்ளன. உலகத்தின் அமர சௌந்திரியம் அனைத்தும் காதலியிடம் கண்டதைச் சொல்ல வந்த மீரா.

''புரட்சியில் மலர்ந்த சோவியத் பூமியின்
கூட்டுப் பண்ணைகளைப்
படங்களில் பார்த்து மலைக்கும்
ஓர் இந்திய உழவனைப் போல
வியப்படைகிறேன்.

என்று பாடியுள்ளார். இதில் இந்திய உழவன் உவமையாகக் காதலன் கண்ட வியப்புக்கு வந்துள்ளது. இதில் இவ்வியப்பு மட்டுமல்ல இந்தியாவில் கூட்டுப் பண்ணை மலரவேண்டும் என்ற எதிர்பார்ப்பின் ஏக்கமும் பிரதிபலிக்கிறது. கவிஞர் வைமுத்துவின். இயற்கையோடு இயைந்த வாழ்வு' என்ற கவிதையில் மகன், பிறை நிலாவைப்பற்றிக் கேள்வி கேட்கிறான்.
அதற்கு அப்பாவின் பதில்

''அதுக்கும் நம்மைப்போல்
மாசக் கடைசியோ
என்னவோ மகனே ''

என்கிறார், இப்பதிலில். 'நம்மைப்போல்' என்றும் உவமையால மாதச்சம்பளம் பெற்று மாதக்கடைசியில் பற்றாக்குறையோடு அவதிப்படும் நடுத்தரக் குடும்பங்களின் சராசரி மனிதர்களின் அவலநிலை ஒலிக்கின்றது. இக்காலத்தில் சம்பளம் பெற்று வாழும் சராசரி மக்கள் எப்படி இயற்கையோடு (சங்கத் தமிழன் போல் அல்ல)

இயைந்த வாழ்க்கைப் போராட்டம் நடத்துகிறார்கள் என்பது கிண்டலுடன் இங்கு சொல்லப்பட்டுள்ளது.

சக்திக் கனல் பாடிய ''ஒரு தெருப்பாடகனுக்குத் தேசப்பிதாவின் பதில்'' என்ற கவிதையில்

''இன்று நாற்காலிகளுக்காக
நான்கு கால் பிராணிகளைப் போல்
நடுத்தெருவில்
சண்டைபிடுகிறார்கள்''

என்று பாடியிருக்கிறார், இதில் அரசியல்வாதிகள் பதவியைப் பெறுவதில் மிருகமாக மாறிப்போன இன்றைய அரசியலின் ஆர்ப்பாட்டம் அர்த்தமாகியுள்ளது.

கவிஞர் சிற்பி 'யாருடைய நிழல்நான்' என்னும் கேள்விக்குச் 'சூரிய நிழல்' என்னும் கவிதையில் பதில் சொல்ல வரும்போது,

'இருளின் தீற்றல்கள்
என்மீது......எனினும்
நீக்ரோக் குழந்தையின்
வெள்ளரிச் சிரிப்புப்போல்
ஆதிச் சூரியனின்
ஒளித் திவலைகள்
எனக்குள்......எப்போதும்'

என்று பதில் சொல்லியுள்ளார்.

இக்கவிதையில் மனிதன் மூலத்தின் ஒரு அம்சம் என்னும் பிரபஞ்ச நோக்கில் ஒளித்திவலைகள் என்று கூறியுள்ளார். ஒளித்திவலைகளைக் கரிய நீக்ரோக் குழந்தையின் வெண்மைச் சிரிப்புக்கு உவமையாக்கியுள்ளார்.

காதலன், காதலியின் காதலுக்காகத் துடிக்கும் இதயத் துடிப்பை உணர்த்த வந்த கவிஞர் சிதம்பரநாதன்.

''ஃபியூசாகிப் போன
பல்புக்குள்
அறுந்து போன

சன்ன இழைபோல்
நான் துடியாய்த் துடிப்பது
தெரியாத உனக்கு'

என்று மனித உணர்வுக்கு அறிவியலைப் புதிய உவமையாகச் சொல்லியுள்ளார்.

வாழ்க்கைக்குப் பயன்படாத நம் கல்வி முறையை விமர்சிக்கும் கவிஞர் மேத்தா.

'நமத்துப் போன
தீக்குச்சியைப் போல்
சும்மா
உரசி பார்த்துவிட்டு
உதிர்ந்து போகிறது.'

என்று நடைமுறையின் அனுபவத்தோடு பயனற்ற கல்வியை நமத்துப்போன தீக்குச்சிக்கு உவமையாகக் குறிப்பிட்டுள்ளார்.

'ஓர் அரசியல் வாதியின் காதல் கடிதம், என்னும் கவிதையில் வாழ்வுக்கு நடைமுறை அரசியல் வாழ்வை உவமையாகச் சொல்லியுள்ளார் கௌதமன்.

'என் இனியவளே
மந்திரி சபைகள் கலைக்கப்பட்டபின்
முந்தைய நிகழ்ச்சிகளை
நினைவு கூரும்
ஓர் இந்திய எம். எல். ஏ. வைப்போல்
நானும் உன்னை நினைத்துப்
பார்க்கிறேன்'

இக்கவிதையில் நிதர்சனமான நிலையில் காதலியை நினைத்துப் பார்த்த காதலனுக்குப் பதவி பறிபோன எம். எல். ஏ. யை நவீன உவமையாக்கியுள்ளார்.

புதிய சோதனை முயற்சிகளில் உருவான புதுக்கவிதை புதிய சமுதாய அமைப்புக்கும், அரசியல் அமைப்புக்கும் பாடுபட்டு வரும் பாங்கினைப் பல கவிதைகள் உணர்த்துகின்றன.

வணக்கம் என்பார்
வணங்கமாட்டார்
நலம் பார்த்தறியார்
நலமென்றெழுதுவார்
பொதுவான பொய்களில்
பொலிகிறது வாழ்க்கை'' —பாலா

# 6. அங்கதம்

அங்கதம் நகைச்சுவை உணர்வை உண்டாக்கும், ஆனால் நகைச்சுவை அங்கதத்தை உணர்த்தாது. எனவே அங்கதம் என்று நகைச்சுவையோடு குத்தல் உணர்வும் விரவி வருவதாகும். தொல்காப்பியர்.

'' அங்கதந்தானே அரில்தபத் தெரியின்
செம்பொருள் கரத்ததென இருவகைத்தே ''

என்று அங்கதத்தை இருவகையாகக் கூறியுள்ளார். இதில் செம்பொருள் அங்கதத்தில் நேரடியான குத்தல் உணர்வு இருக்கும், பழி கரப்பு அங்கதம், புகழ்வதுபோல் இகழ்வதும், இகழ்வதுபோல் புகழ்வதுமாக அமையும்.

இன்று பலரின் அங்கீகாரத்தைப்பெற்று இலக்கிய வீதியில் பவனி வரும் புதிய இலக்கியம் புதுக்கவிதை. இப்புதுக்கவிதைகளில் சமுதாயப் பார்வை மிகுதியும் காணப்படுகிறது, சமுதாயப் பார்வைக்குப் புதுக்கவிஞர்கள் அங்கதத்தை ஒரு சிறந்த உத்தியாகப்பயன்படுத்தி உள்ளனர். ''தீமைகளைத் திருத்துவதே அங்கதத்தின் முடிந்த முடிவு'' என்கிறார் டிரைடன். மேலும் டாக்டர் ஜான்சன். '' அங்கதக் கவிதை என்பது தீமை செய்தலையும், முட்டாள் தனத்தையும் கடுமையான கேலிக்கு உள்ளாக்கு தல்'' என்கிறார்.

இக் கொள்கைகளின்படி புதுக்கவிஞர்கள் சமுதாயத்தில் நோய்க்கிருமிகளைப் பார்த்துச் சங்கடமும் கோபமும் கொண்டு தீமைகளைத் திருத்த- சமுதாயமும் திருந்த அங்கதக் கவிதைகளைப் பாடியுள்ளனர், தொல்காப்பியர் சொன்ன, நேரடியான குத்தல் உணர்வும் (செம்பொருள்) புகழ்வது போல் இகழ்வதும் (பழிகரப்பு) புதுக்கவிதைகளில் மிகவும் அதிமாகக் காணப்படுகின்றன, பல புதுக்கவிஞர் களின் கவிதைத் தொகுதிகளில் தனித்தனியான அங்கதக் கவிதைகள் உள. பல்வேறு துறைகளின் சீர்கேடுகளைச் சமுதாயத்திற்கு அடையாளம் காட்டும் முதல் அங்கதக் கவிதைத் தொகுப்புத்தான் "''மீராவின் ஊசிகள் '' இதில் கவிஞர் மீரா ''இலக்கிய உப்பரிகையில் உலாவுவதைவிடச் சமுதாய நடைபாதைகளைச் செப்பனிடுவதையே முக்கிய மாகச் கருதுகிறேன்''. என்கிறார். ஆகையால் புதுக்கவிதை களின் அங்கதம் ஆரோக்கியமான சமுதாயத்தின் விடியலுக் காகச் சமுதாய வீதிகளில் உலாச் செல்வது புலனாகிறது.

இந்நாட்டில் மாணவர்களின் எதிர்கால நிலையை நினைத்த சுப்பு அரங்கநாதன்,

இருபது வருடம்
இனிது வாழ்ந்தவன்
இனி

இருக்கும் வரைக்கும்
அழுதே மாய்வேன்
என்று ''
அடுத்த ஜூனில்
நானொரு 'பி. ஏ.''

இக்கவிதையில் இந்திய வீதிகளில், பட்டம் பெற்று வேலையில்லாது அலையும்; அலையப் போகும் மாணவர்களின் அவல நிலையைப்பாடியுள்ளார். மனைவியின் பிரிவால் தனிமைத் துயரத்தை வருந்திப் பாடும் கவிஞர் பஞ்சு,

''பலவழியில் நீயும்
ஒரு பல்கலைக்கழகம் தான்
ஆம்
சமுதாயத்திலிருந்து நீயும்
என்னைப் பிரித்து விட்டாய்''

என்று சமுதாயத்தோடு பொருந்தாத கல்வி முறையை நையாண்டி செய்து உள்ளார்.

'' எம்ப்ளாய்மெண்ட்
எக்சேஞ்சுக்குப்
பதிவுசெய்யப் புறப்பட்ட
மகனிடம் கேட்டுக்கொண்டார்
தந்தை
என்னுடையதையும்
ரெனிவல் செய்துகொண்டு
வந்துவிடப்பா ''

இக்கவிதையில் கவிஞர் அறிவுமதி, வேலைவாய்ப்புப் பெறுவதில் தந்தையும் மகனும் 'ரெனிவல்' தொடர்கதையாகத் தான் உள்ளனர் என்பதை நையாண்டி செய்துள்ளார்.

கவிஞர் மேத்தா செருப்புடன் பேட்டிகாணும் கவிதையில்

''தீவிரமாக எதைப்பற்றியாவது நீங்கள்
சிந்திப்பதுண்டா?
உண்டு

சில தேசங்களையும்
சில ஆட்சிகளையும்
பார்க்கும்போது
மீண்டும் நாங்களே
சிம்மாசனம்
ஏறிவிடலாமா?
என்று
யோசிப்பதுண்டு ''

எனக் கூறுவதிலிருந்து இந்தியாவில் நடைபெறும் ஆட்சியின் காட்சிகளைக் குத்திக்காட்டும் விதம் மிகவும் நகைச்சுவையாகவும், புதுமையாகவும் உள்ளது. இந் நாட்டில் பல கட்சிகள் தாவும் அரசியல்வாதிகளின் திறமைகளை வியப்பதுபோல் கேலிசெய்யும் மீரா.

''எங்கள் ஊர் எம். எல். ஏ.
ஏழு மாதத்தில்
எட்டுத் தடவை
கட்சி மாறினார்!
மின்னல் வேகம்
என்ன வேகம்
என்ன வேகம்?
இன்னும் எழுபது
கட்சி இருந்தால்
இன்னும் வேகம்
காட்டி இருப்பார்... ...
என்ன தேசம்
இந்த தேசம்?

என்று தேசத்தைக் குறைபட்டுக்கொள்ளும் வேகத்தில் அரசியல்வாதிகளை அடையாளம் காட்டியுள்ளார். பாரதச் செல்வனும் அந்நியச் சிறுவனும் உரையாடும்போது, நாயும் பன்றியும் குட்டிகள் போடுவதைப் பேசுகின்றனர். அப்போது பாரதச் செல்வன்.

''எங்கள் நாட்டில்
கட்சிகள் பற்பல
குட்டிகள் போடும்

என்கிறான். உடனே அந்நியச் சிறுவன்,

தம் நாட்டில் இல்லாத பெருமை பாரத நாட்டிற்கு இருப்பதை அறிந்து தலைகுனிகிறான். இதில் கவிஞர் மீரா நம் பாரத நாட்டைப் புகழ்வது போல் புதிய புதிய அரசியல் கட்சிகளின் பிரசவங்களின் இழிநிலையைப் புலப் படுத்தி உள்ளார். கொள்ளை இலாபம் அடிக்கும் கலப்பட வியாபாரிக்குக் கல்லறை வரிகள் பாடும் கவிஞர் இன்குலாப்·

''இவன்
கலப்படம் செய்த கல்லாலும் மணலாலுமே
இவனது கல்லறை எழுப்பப்பட்டது''

என்று கலப்படத்தின் மிகுதியை அங்கதச் சுவையில் அழகாக வெளிக்காட்டியுள்ளார்.

நீதிமன்றங்களில் நியாயங்கள் மரணம் அடைவதைக் கவிஞர் சிற்பி,

''நியாயங்களின் சமாதிகளை
நீங்கள் கண்டதுண்டா!
எங்கள் நாட்டில் அவைகளை
'நீதிமன்றங்கள்' என்போம்''

என்று அங்கதப்படுத்தியுள்ளார்.

அரசு செயலகங்களில் பொறுப்பின்றித் தூங்கிவழிந்து காலம் கடந்து செயலாற்றும் அலுவலர்களையும் மக்களின் தேவைகளைச் செயற்படுத்தாது தேங்கிக்கிடக்கும் கோப்புக் களையும் கண்ட கவிஞர் ஞானக்கூத்தன் சங்ககால மோசிகீரனாரை வைத்து ஒரு நையாண்டி செய்கிறார்.

''மோசிகீரா ..
... ... ...
உன்மேல் அளவிறந்த
அன்பு தோன்றிற்று

இன்றெனக்கு
அரசாங்கத்துக் கட்டிடத்தில்
தூக்கம்போட்ட முதல் மனிதன்
நீதான் என்னும் காரணத்தால் ''

என்று அலுவலகத் தூங்குமூஞ்சிகளைக் குத்திக்காட்டி உள்ளார்.

க. நா. சு. வின் 'இனம்' என்ற கவிதையை ஓர் அரசியல் அங்கதக் கவிதையாகப் படைத்துள்ளார்.

''ஊருக்கு உழைத்தவன்
ஆண்டியானான்
பாருக்காகப் பாடுபட்டவன்
போண்டியானான்.
அவனை ஏவி வேலை வாங்கியவன்
மந்திரியானான்.

என்பதில் ஊருக்காக உழைத்த உத்தமர்கள், நாட்டுக்காகப் பாடுபட்ட தியாகிகள் ஆதிக்க சக்திகளால் ஆக்கிரமிக்கப் பாடுகிறார்கள் என்பதை மையப் பொருளாக்கியுள்ளார். போலித்தனமானவர்கள் மந்திரியாவதையும், உண்மைத் தியாகிகள் புறக்கணிக்கப்படுவதையும் அங்கதச் சுவையில் அறிவுறுத்தியுள்ளார்.

இன்றைய சமூகத்தில் நியாய விலைக் கடைக்கு அலைந்தும், திரைப்படத்துக்குள் வீழ்ந்தும் சரிந்துபோய்க் கொண்டிருக்கும் குடும்பச் சூழலைக் கவிஞர் புவியரசு காணாமல் போன மனைவியைத்தேடும் கணவனின் குரலில் அங்கதப் பாணியில் அறிவித்துள்ளார்.

''எம் பிரியமுள்ள மனைவியே!
நீ எங்கிருந்தாலும்
உடனே வா
நீ இல்லாமல் நாங்கள் தவிக்கிறோம்.
உன்னை இனிமேல்
ரேஷன் கடை சினிமாவுக்கு

அனுப்ப மாட்டேன்
நானே அங்கெல்லாம் போய்க்
காணாமல் போவேன்
இன்னும் காணாமல் போகாமல்
தவித்துக் கொண்டிருக்கும்
உன் குழந்தைகளும், புருஷனும் ''

என்பதில் காணாமல் போய்க் கொண்டிருக்கும் வாழ்க்கையை மீட்கவேண்டிய சமூகப்பொறுப்பு உட்கருத்தாக அமைந்துள்ளது.

கவிஞர் சிற்பி, குலமகள், விலை மகளாக்கப்படும் சமுக அவலத்தை 'மௌன மயக்கங்கள்' என்ற கதைக் கவிதையில் வேதனையோடு வெளிப்படுத்தியுள்ளார்.

'மதுரையிலே அவள் பேர்
மீனாட்சி
காஞ்சியிலே அவள் பேர்
காமாட்சி !
காசியிலே அவள் பேர்
விசாலாட்சி !
அதுக்கும் ஒருபடி
உயர்ந்தவங்க நாங்க........
ஊருக்கொரு பெயர் —
நாளுங்கொரு பெயர் —
ஆளுக்கொரு பெயர் —''

இக்கவிதையில் தெய்வத்திற்கு மட்டும் ஆயிரம் திருப்பெயர்கள் இருப்பதைப்போல் சிவப்பு விளக்குப் பகுதியில் அழிந்துவரும் பெண்ணுக்கு நாளுக்கும், ஆளுக்கும் ஏற்றாற்போல பல பெயர்கள் என்கிறார். அதாவது கடவுளர்களைக் காட்டிலும் இப்பெண்களை உயர்த்திப் பேசுவதுபோல் நம் பண்பாட்டுச் சீரழிவை அங்கத நோக்கில் சாடியிருக்கிறார்.

சாதிக்கொடுமை மக்கள் வாழ்வில் ஏற்படுத்திவரும் மோதலையும் அதனால் ஏற்படும் மரண விளைவுகளையும்

'ஒரு டீயின் விலை' என்ற கவிதையைக் கந்தர்வன் அங்கத மாக்கியுள்ளார்.

'' நாடெங்கும்
விலைவாசி உயர்வு
ஒரு டீயின் விலை
அறுபது பைசா என்பது
விலைவாசி உயர்வல்ல
பொது கிளாஸில்
டீ கேட்க
தனி கிளாஸில்
டீ கொடுக்க —
ஒரு டீயின் விலை
ஒன்பது உயிர்கள் என்று
விலைவாசி
உயர்ந்து கிடக்கிறது.''

இக்கவிதையில் சாதிக்கொடுமை ஏற்படுத்திய ஒன்பது உயிர்களின் மரணத்தை ஒரு டீயின் விலையாகச் சொல்லி யுள்ளார், ஒன்பது உயிர்களைக்கொன்ற டீயின் விலை உயர்வு என்று கேலி செய்து நம்மைச் சிந்திக்க வைத் துள்ளார்.

அக்காலத்தில் பெண்களின் கொலுசும் வலையல் களும் எழுப்பிய ஒலிகளில் அன்பையும் அழகையும் கேட்டு ஆண்கள், மகிழ்ந்தனர். ஆனால் இன்றைய ஆண் ஆதிக்கச் சமூகத்தில் அன்புநிலை மாறி வரதட்சணை வாட்டும் நிலையை 'அன்றும் இன்றும் என்னும் கவிதையில் வாழ்வு நிலைகளை ஒப்பிட்டுக் காட்டியுள்ளார் கவிஞர் பாலா.

'அவனிடம் அதிகம் பேசியது
அவளைவிட
அவள் நகைகளே !
எனவேதான்

புன்னகை போதாது
பொன்னகையும் வேண்டுமென
அடித்துச் சொல்கிறான் இப்போது !

இக்கவிதையில் ஆண்களிடம் மேலோங்கியுள்ள வரதட்சணை உணர்வை வெளிப்படுத்தப் 'பொன்னகை' என்ற சொல்லை அங்கதமாக அர்த்தப்படுத்தியுள்ளார்.

கிராமத்தில் உற்பத்தியாகும் முட்டை, பால், நெய் முதலிய பொருள்களெல்லாம் நகரங்களை நோக்கிச் சென்று விடுகின்றன. அதனால் உற்பத்தி செய்த கிராமம் வெறுமையடைகிறது என்பதை 'நூற்றாண்டுக் கவலைகள்' என்ற கவிதையில் எடுத்துக் காட்டியுள்ளார் கவிஞர் பஞ்சு.

'முட்டைகள் கிராமத்தில்
காணாமல் போகும்
நெய் வாடையும்
அற்றுப் போகும்
'வெண்மைப் புரட்சி' என்று
வெளிவரும் செய்தி'

இக்கவிதையில் வறுமையும், வெறுமையும் நிறைந்த கிராமங்களில் வெண்மைப்புரட்சி எழுதிவரும் போக்கைக் கிண்டல் செய்துள்ளார்.

புதுக் கவிதைகளில் அங்கதம் சமூகத் தீமைகளை அடையாளம் காட்டியுள்ளது அதற்குக் காரணம் இச்சமுதாயம் மறுமலர்ச்சி அடைய வேண்டுமென்பதுதான். ,"அங்கதம் என்பது மறுமலர்ச்சி செய்தல்'' என்று கூறும் டேனியல் டேபோவின் கூற்றைப் புதுக்கவிதைகளில் அங்கதம் உறுதிசெய்கிறது.

—●—

''ஊரே எரிகிறது
ஊமை மனம் அழுகிறது''

இது ஒரு
கிராமத்தின் கதையல்ல
பாரதம் அடிக்கடி
பார்த்துத் துடித்திடும்
இராமாயணம். மேத்தா

# 7. கதைக்கவிதை

சமுதாயத்தில் மனிதர்களிடையே கதை கேட்பதும் கதை சொல்வதும் அன்று முதல் இன்று வரை. ஒரு கூறாக நிலவி வருகின்றது. இந்தக்கூறு இலக்கியப் படைப்புகள் உருவான காலத்தில் அப்படைப்புகளுக்குள்ளும் ஊடுருவி இருக்கின்றது. சங்க காலத்தின் புறப்பாடல்களிலும், அகப்பாடல்களிலும் இக் கதைப்போக்கைச் சங்கப்புலவர்கள் போற்றி இருக்கின்றனர். சங்க இலக்கியத்திற்குப் பின்பு உருவான கதையோடு நடந்த காதைகளைக் கொண்ட காப்பியங்களான சிலம்பிலும், மணிமேகலையிலும் தொடர்

கதை போக்கும், கிளைக் கதைப்போக்கும் காணப்படுகின்றன. மேலும் சிற்றிலக்கியங்களாகிய குறவஞ்சி, பள்ளு முதலான இலக்கிய வடிவங்களிலும் கதைப்போக்குப் பின்பற்றப்பட்டுள்ளது. இருபதாம் நூற்றாண்டில் மறுமலர்ச்சியில் உருவான நவீன இலக்கியத்தில் ஒன்று புனைகதை இலக்கியமாகும் இப்புனைகதை இலக்கியத்தில சிறுகதை என்பது தனிக்கலையாக பரிணாமம் பெற்றுள்ளது. பாரதி, பாரதிதாசன், கண்ணதாசன் முதலியோரின், கதைப்படைப்புகளிலும் கதைப்போக்குக்காணப்படுகின்றது.

புதுக்கவிதை என்னும் புதிய இலக்கிய வடிவத்திலும் கதைப்போக்கைப் பின்பற்றிப் புதுக்கவிஞர்கள் கதைக் கவிதையைப் படைத்துள்ளனர். இக்கதைக் கவிதைப் போக்குத் தமிழிலக்கியத்தில் அன்றும், இன்றும் இலக்கியப் படைப்பு முறையின் ஒரு மரபாக வளர்ந்து வந்திருக்கின்றது என்பதை அறிய முடிகின்றது. இந்தக் கதை கவிதைப் போக்கினை ந. பிச்சமுர்த்தி, மீரா. சிற்பி, சக்திக்கனல், கந்தர்வன். முருகு சுந்தரம், சிதம்பரநாதன், கலாப்ரியா, சி. மணி, மு. மேத்தா முதலிய புதுக்கவிஞர்களிடம் காணமுடிகின்றது. இக்கதைக்கவிதைப்போக்கைப் புதுக்கவிதையில் மிகுதியாகக் கவிஞர் சிற்பி கையாண்டுள்ளார். இந்தக் கதைக் கவிதைப் போக்கு தமிழ் இலக்கியத்தில் விரிவாகவும்; விளக்கமாகவும் ஆராய வேண்டியது. இருப்பினும் இக்கட்டுரையில் புதுக்கவிதையில் காணப்படும கதைப்போக்கினைச் சில சான்றுகள் மூலம் அடையாளப்படுத்தப்பட்டுள்ளது.

புதுக்கவிஞர்களில் முன்னோடியான ந. பிச்சமூர்த்தி கதைக் கவிதைகளைக் கதாபாத்திரங்கள், நிகழ்ச்சிகள் அவற்றிடையே ஏற்படும் விளைவுகளைப் பல கோணங்களில் படைத்துள்ளார்.

'தாயும் குஞ்சும்' என்னும் கவிதையில் தாய் மீனைப் பழமைக்கும், மீன் குஞ்சைப் புதுமையின் தேடலுக்கும் குறியீடுகளாக்கி உரையாடல் முறையில் கதைக் கவிதையை அமைத்துள்ளார்.

'கடவுளே விதித்தார் என்றும்
போதனை செய்து வந்தாய்
புதுமையைக் கொன்று வந்தாய்'

என்று மீன்குஞ்சு தாயிடம் விடைபெற்றும் நாட்டு வாழ்வில் இருந்தும் விடுபட்டு மழை நீரால் மீன் குஞ்சு புதிய வாழ்வுக்குச் செல்கின்றது. அந்த வாழ்வில் நன்செய் வயலில், ஓடை நீரில். வாய்க்காலில் கண்ட இன்ப வாழ்வும். புதுமை வாழ்வும் தூண்டிலில் சிக்கிக் கொதிக்கும் குழம்பில் வெந்து முடிகின்றது. அது போல் தாய் மீனும் நீர் வற்றிய பின் வலையில் சிக்கி அதே குழம்பில் வெந்து முடிகின்றது வாழ்க்கை. அப்போது கெண்டையின் ஆவி

'புதுமையில் பேராவல்கொண்டேன்
அம்மா! பல
காட்சி வழியில் கண்டேன் அம்மா!
இன்பம் விடுதலை என்றேன்
அம்மா! புது
வேதனை முள்ளில் தவித்தேன்'

என்று முறையிடுகின்றது. அது கேட்ட தாயின் ஆவி

'வாழ்வுக்கனி பழுக்க வீழ்ந்தேன்
அம்மா—சற்றும்
புதுமையின் மையல் என்னை
ஆட்டவேயில்லை
நீரும் நிழலும் தீர உயிர்
விடுத்தேன்'

என்று பதில் உரைக்கின்றது. இக்கவிதையின் இறுதியில் இருந்த இடத்திலே இன்பம் காணுவதே ஞானம் என்று தாய், சேய்க்குச் சொல்வதைப் போல் முடித்திருக்

கின்றார் பிச்சமூர்த்தி. கிராமத்தில் இருந்து புதிய வாழ்வைத் தேடி நகருக்கும். நகரங்களில் இருந்து வெளி நாட்டுக்கும் வேகமாகப் பறந்து கொண்டிருக்கும் இந்த யுகத்தில் இகுந்த இடத்திலே இருந்து இன்பம் காண முடியும் என்பது மறு பரிசீலனை செய்ய வேண்டிய ஒன்றாகும்.

கவிஞர் மீரா 'கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள்' ஏன்ற தொகுப்பில் காதல் கதையை மையமாக்கியுள்ளார். எழுபதில் இவர் தொடங்கி வைத்த இந்தப் போக்கு நூற்றுக்கணக்கான பிரதிகளைத் தோற்றுவித்துள்ளது.

'உலக பந்தம் என்னும்
ஒரு சக்தியின் பிடியிலிருந்து
மீற முடியாமல் - அதே நேரத்தில்
மீற வேண்டும் என்னும்
வேகத்தையும் கட்டுப்படுத்த முடியாமல்
தவிக்கும் ஓர் ஆன்மாவின்'

மனித உணர்வுகளை ஆதிமுதல் அந்தம் வரை காதலன் காதலியை நோக்கிப் பேசும் மன அசைவுகளாக அமைத்துள்ளார். இக்காதல் கவிதையில் பெயரைக் குறிப்பிடாமல் உணர்வுகளை அக மரபில் கதைப் போக்கிலும், நாடகத் தன்மையிலும் அமைத்துள்ளார் மீரா.

இக்கதையில் வரும் கதைத் தலைவனுக்குத் தெய்வாம்சம் பொருந்திய பேரழகுத் தலைவி கிடைக்காமல் போய் விடுகின்றாள். அதனால் அவனுக்குள் ஏற்பட்ட மன அதிர்வுகளை நகலாக்க முடியாமல் அசலாக்கியுள்ளார் மீரா.

'செப்புக் கம்பிகளில் மின்சாரத்தை
ஊடுருவ வைத்துவிட்டு
விஞ்ஞான வேலைக்காரன்

விலகிக் கொள்வதைப் போல்
என் சிந்தனை ஒவ்வொன்றிலும்
உன் ஆதிக்கத்தை ஊடுருவ வைத்துவிட்டு
நீ விலகப் போகிறாயா!
நீ என்னை விட்டுப் பிரியப் போகிறாயா!
நிலப் பிரபுத்துவத்தின்
நீசக் கரத்தில் சிக்கிக்கிடக்கும்
கூலி விவசாயிகள் குடும்பம்போல்
வெந்து பொங்கும் என் வாழ்வைப் பார்
பார்த்து விட்டுப்போ!

என்று எண்ணித் தவிக்கும் அவனின் ஆன்மாவைக் கவிதை ஓவியமாக்கி உள்ளார். கதையின் முடிவில்

'அவளும் நானும் சந்தித்த
அழகுகள் கூடிக் குலவும்
அந்தப் பாதையை விட்டுச் செல்கிறேன்
அந்தப் பாதையிலே வளர்த்த
வசீகரமான கனவுகளையும்:
-கற்பனைகளையும்
விட்டுச் செல்கிறேன்'

என்று கதையை முடித்துள்ளார்.

புதுக்கவிதையில் கதைப் போக்கினைப் பின்பற்றிக் கவிஞர் சிற்பி 'மௌன மயக்கம்' என்னும் காவியத்தைப் படைத்துள்ளார். இது தமிழ்க் கவிதையில் புதிய பரிசோதனையில் கிடைத்த கதைக் காவியமாகும். இந்தப் போக்கிலேதான் கவிஞர் வைரமுத்து பாரதியின் வாழ்க்கைச் சரிதத்தைக் 'கவிராஜன்' கதையாக்கியுள்ளார்.

'மௌன மயக்கம்' என்னும் கதைக் காவியத்தில் மல்லிகா, மல்லிகாவின் தாய், கதைத்தலைவன், தோழர், தோழர் மகள் கல்பனா, சிவப்பு வீதிக்காரர்கள் ஆகியோர் பாத்திரங்களாகப் பங்கு பெற்றுள்ளனர். இக்கதைக் காவியம் பெண்மையின் சமூக வரலாற்றில் எழுதப்பட்ட புதிய

முகவரி. சிலப்பதிகாரத்தில் கோவலன், மாதவியை நயந்தவளாக மாற்றிப் பரத்தமையை ஒழிக்க ஒரு முன்னுரை எழுதிய முதல் கவி இளங்கோவடிகள். ஆனால் கதைக் காவியந்தில் வரும் தலைவன் சிவப்பு விளக்குப் பகுதியில் சந்தித்த மல்லிகாவை மணந்து பரத்தைமைக்கு ஒரு முடிவுரை எழுத முயன்றுள்ளார் கவிஞர் சிற்பி

மல்லிகாவின் தாய் கணவனை இழந்தபின் மானத்தோடும். நேர்மையோடும் வாழவிரும்பினாள். அவளுக்கு சமூகம் ஏற்படுத்திய சரிவுகளைச் சொல்ல வந்த கவிஞர்,

'நகைகளை விற்றாள்
அப்புறம் காய்கறி விற்றாள்
தலையில் சுமந்து விறகு விற்றாள்
பிறகு ?
கற்பை விற்றாள் !
எங்களுக்கு
கால் வயிறு நிரம்பியது'

என்பதில் மாறிப்போன அவளின் வாழ்வை வெளிப் படுத்தியுள்ளார்.

அவள் தன் மகளையும் விபச்சாரத் தொழிலில் சித்ராபதியைப் போல் ஈடுபடுத்த முயல்கின்றாள். அதை எதிர்த்துப் போராடிய மல்லிகா முடிவில் சிவப்பு விளக்குப் பகுதியில் போய்ச்சேருகின்றாள். அந்தப் பகுதியில் அவளைச் சந்தித்த தலைவன்,

' இந்த வியாபார சமூகத்தில்
நீ விற்பனை பொருளானதில்
ஆச்சரியமில்லை'

என்று விளித்து

ஒரு வித்தியாசமான ஆண்மையின் முகமாக வெளிப் படுகின்றான். அதனால் அவன்,

'உன்னைப் பெண் பார்க்க
நான் வந்த கதை
இதுதான்'

என்றும் முன் மொழிகிறான்.

' பூக்களுக்கு
முதுகெலும்பு இல்லை
பெண்களுக்குப்
பாதுகாப்பும் இல்லை'

என்று பேசும் மல்லிகாவுக்காகத் தலைவன்,

' எமன் வீட்டு வாசலையும்
உனக்காகத் தட்டுவேன்'

என்ற மனவுறுதியைப் பெறுகின்றான். இவ்வுறுதியோடும், தோழரின் துணையோடும் மல்லிகாவை மீட்டி வாழ்க்கைத் துணையாக்கிக் கொள்கின்றான்.

ஆனால் விபச்சார விடுதியின் சதிகாரர்கள் தொழிலுக்கு வரவில்லையென்றால் கணவனைக் கொன்று விடுவோமென்று அச்சுறுத்துகின்றனர். அதனால் அவள் அந்தத்தூய மனிதனைக் காப்பாற்றவும் தாயின் கட்டாயத்திலிருந்து, விடுபடவும் அந்தக் குல விளக்கு தற்கொலை செய்து கொள்கிறது.

அறிவுச் சுடராகவும், புதிய மானுடமாகவும் தலைவன் பொதுவுடைமை இயக்கத் தோழரின் வரவாலும் அவரின் மகள் கல்பனாவின் சொல்லாலும் புதிய ஒளியைப் பெறுகிறான்.

'கனவும் காதலும் மட்டும்
யாரையும் காப்பாற்றாது
கனல் வேண்டும்
மனதில் லட்சியக்
கனல் வேண்டும்'

என்று கூறும் கல்பனாவின் மொழிகளால் ஈர்க்கப்பட்டு இலட்சியக் கனலைப் பெறுகிறான் தலைவன் இந்த

இலட்சிய உணர்வைப் பெற்ற கதைத் தலைவனும், கல்பனாவும் இணைந்து இயக்கமாகியதைச் சொல்ல வரும் கவிஞர்.

'இப்போது எங்களுக்கு இல்லை
மௌன மயக்கங்கள்
ஏனெனில்
எங்களை இணைத்திருப்பது
சமூக விடுதலை இயக்கங்கள்'

என்பதில் ஆண்மையும், பெண்மையும் சேர்ந்து மானுட விடுதலைக்காகப் போராட வேண்டுமென்று முடித்திருக்கின்றார்.

கவிஞர் முருகு சுந்தரம் நாடகப் போக்கிலும், சிறு கதைப் போக்கிலும் புதுக்கவிதைகளைப் படைத்துள்ளார். அவருடைய கவிதைத்திறன் கதைக் காவியமாக விளங்கு கின்றது.

'உடைந்த குழல்' என்ற கவிதையை இசை தழுவிய ஒரு காதல் கதையாக அமைத்திருக்கின்றார். இந்தக் கதையைச் சேலம் சேர்வராயன் மலையின் அடிவாரத்தில் உள்ள மூக்கனேரி எனும் கிராமியப் பின்னணியில் அமைத்து இருக்கின்றார். அவ்வூரில் கோல மயிலாக வாழ்ந்த பூஞ் சோலையை அவள் தந்தை செங்கான் ஏகாலி நாகனுக்கு இரண்டாம் மனைவியாக ஆக்குகின்றான். நாகனோ பெய ரில் மட்டும் நாகனாக இல்லாமல் பண்பிலும், செயலிலும் குடிவெறி கொண்டலையும் நாகமாக இருக்கின்றான், அன்பிற்கும் இன்பத்திற்கும் ஏங்கித் தவிக்கும் பூஞ் சோலை மூக்கனேரியின் அக்கரையில் இருந்து இரவு நேரத்தில் மிதந்துவந்த புல்லாங்குழலின் இசையில் புள காங்கிதம் அடைந்து கரைத்து போகிறாள். அந்தப் புல் லாங்குழலை நோக்கிக் கரை கடந்து ஒருகால் இழந்த கட்டிளம் காளையான 'கோவாலு' என்பவனைக் கண்டு புதிய காதல் எழுதுகின்றாள். பொருந்தாத மணத்துடன் திருந்தாத உள்ளத்துடன் வாழ விரும்பாத பூஞ்சோலை

இன்னிசை இதயமாகிய கோவாலுவைச் சந்தித்து அவனை அடைய விரும்புகின்றாள். நாகன் செய்த சூழ்ச்சியால் ஆற்றில் மூழ்கி மரணித்துப்போகிறாள். அந்த அழகு பூஞ்சோலையைப் புல்லாங்குழல் காக்க முயன்றதைக் கவிஞர்,

'அப்போது
இரண்டு இரும்புக் கரங்கள்
அவளை இறுகத் தழுவின
ஒற்றைக் காலில் நீந்திவந்து
ஓய்ந்துபோன
கோவாலுவின் கரங்கள் அவை
அடுத்தநாள்
பின்னிய கொடிகளாக
இரண்டு பிணங்கள்
மூக்கனேரிக் கரையில்
ஒதுங்கிக் கிடந்தன
உடைந்த
புல்லாங் குழலொன்று
அருகில் கிடந்தது.'

என்று கவிதையாக்கியுள்ளார்.

இது பொருந்தாத மணத்தால் ஏற்படும் விளைவை யும், தந்தை செங்கானின் ஆதிக்கத்தால் ஏற்பட்ட கொடு மையையும் பூஞ்சோலையை மையமாக வைத்துக் கவிதை யாக்கப்பட்டுள்ளது. இந்தக் கவிதைக்கு அடிப்படையாகக் கிரேக்க நாட்டு இளைஞன் 'லியாண்டர்' அக்கரையில் தன் காதலியைச் சந்தித்து வருகையில் கடவுளின் சாபத் தால் மூழ்கினான் என்னும் கிரேக்க நாட்டுத் இந்தத் தொன்மத்தை கவிஞர் முருகு சுந்தரம் மாற்றிச் சேலத்துப் பின்னணியில் பூஞ்சோலையின் வாழ்க்கைக்குப் பயன்படுத்திக் கதைக் கவிதையைப் படைத்துள்ளார்.

தமிழ்ச் சிறுகதைக்கலையில் கவனிக்கத் தக்கவர் கந்தர்வன். அவரின் இன்னொரு படைப்பு முகம் கவிஞர். அவர் எழுதிய 'சிறைகள்' எனும் கவிதைத் தொகுதி புதுக் கவிதைகளின் வரிசையில் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். 'பாரமும் தூரமும்' கவிதையாக மட்டுமின்றிச் சிறுகதையாகவும் அமைந்திருக்கிறது. இந்தக் கவிதையில் வரும் அம்மா, சாரதா, சின்னம்மா ஆகியோர் இந்தத் தேசத்தின் அப்பாவிப் பெண்களுக்குக் குறியீடுகளாக்கியுள்ளார். இப்பெண்கள் தம் பொது எதிரியை அடையாளம் காண முடியாமல் தனி மனிதப் பகையில் சிக்கிப் 'பாரத்தையும் தூரத்தையும்' மறந்தும் தவித்தும் வாழ்கின்றனர். இத் தவிப்பைச் சொல்ல வந்த கவிஞர்.

'நல்ல தண்ணி கிணத்துக்கு
நாலு கிலோ மீட்டர் தூரம்
வக்கணையாய்ப் பாதை
வரிசையாய் கருவ மரம்
ஊர்ப் பெண்கள் எல்லோருக்கும்
ஒருத்தி பகை வேண்டும்
தலையில் ஒரு குடமும்
இடுப்பில் மறு குடமும்
பாரமும் தூரமும் இந்தப்
பகையில் மறந்து விடும்'

என்று கிராமிய மக்கள் தண்ணீருக்காக அலையும் கொடுமையை வெளிப்படுத்தியுள்ளார். நம் நாடு சுதந்திரம் பெற்று ஐம்பது ஆண்டுகளாகியும் குடிக்கத் தண்ணீரில்லாக் கொடுமை இன்னும் நிலவுகின்றது. அந்த கொடுமைக்கு யார் காரணம் என்று புரியாதமானுட நிலையையும் வேதனையோடு கவிதையாக்கியுள்ளார் கந்தர்வன்.

இதுவரை கண்ட சில சான்றுகள் சமூகச் சிக்கலையும் குடும்பச்சிக்கலையும் வெளிப்படுத்துவதற்கு புதுக்கவிதைகளில் கதைப்போக்குப் படைப்பு முறையாகப் பயன்படுத்தப் பட்டுள்ளன என்றும் மதிப்பிடலாம். ●

"அன்புள்ள அம்மா!
உன் தாலாட்டில்
இன்னும்
நானே விழித்து
எழுந்திருக்கவில்லை.
அவனாவது
உறங்கிவிடாமல்
உலகைப் பார்க்கட்டும்"

—தமிழன்பன்

# 8. நாட்டுப்புறப் பாங்கு

உலக இலக்கியங்களின் தோற்றத்திற்கு அடிப்படையாக இருந்தது 'வாய்மொழி இலக்கியம்' என்பர். கிராமிய மக்கள் தன் உணர்வுகளை வெளிப்படுத்துவதற்கு வழிபாட்டுப்பாடல், கதை, பாடல், தாலாட்டு, ஒப்பாரி, விடுகதை, போன்ற பல்வேறு வகையான வடிவங்கள் ஏட்டில் எழுதாத வாய்மொழி இலக்கியமாக வளர்ந்து வந்துள்ளது. இலக்கியத்தை எழுதத் தொடங்கிய காலத்தில் நாட்டுப்புறவியல் கூறுகள் இலக்கியங்களுக்குள் இடம்

பெறத் தொடங்கின. இத்தன்மையைச் சிலப்பதிகாரம், திருவாசகம், குறவஞ்சி, பள்ளு, பிள்ளைத்தமிழ் முதலான இலக்கிய வடிவங்களுக்குள் காணப்படுகிறது. சீன நாட்டில் அரசன் ஆட்சி முறையைப்பற்றி அறிந்து கொள்ள ஒற்றர்களை அனுப்பி நாட்டுப்புறபாடல்களையெல்லாம சேகரித்துக் கேட்டறிந்து ஆட்சி செய்தான் என்பர். இது நாட்டுப்புற இலக்கியத்தில் இருந்த நியாயத்தையும், உண்மையையும் உலகிற்கு காட்டும் நல்ல அடையாளம் ஆகும். அதனால் சீனக்கவி பாய்ஜூயி

"நான் சொல்வதை
மன்னர் கேட்பாரென்று
நம்புகிறேன்
மக்களின் கருத்தையும்
உணர்வையும்
அவர் அறிய விரும்பினால்
கவிதையில் அவரை
விமர்சனம் செய்வோரை
அவர் வரவேற்க வேண்டும்"

என்று கவிதை பாட முடிந்தது. நாட்டுப்புறப்பாடல் அந்நக் காலத்தில் அரசுக்கும், மக்களுக்கும் இடையே ஒரு சாதனமாகச் செயல்பட்டிருக்கிறது என்ற உண்மையை அறிய முடிகின்றது. நாட்டுப்புற இலக்கியம் என்பது எழுதப் படிக்கத் தெரியாத பாட்டாளி மக்களின் இன்பத்திலும், துன்பத்திலும் தம் உணர்வுகளை வெளிப்படுத்திய இலக்கியச்சுவடுகளாகும். இந்தச்சுவடுகள் காலத் தொடர்ச்சியில் நாட்டுப்புற இலக்கிய மரபை ஏற்படுத்தியுள்ளன. இந்த மரபு அன்றும் இருந்தது இன்றும் இருக்கிறது. ஆனால், கிராமிய வாழ்க்கைக்குள் ஊடுருவிய தொடர்பியல் சாதனங்கள் நாட்டுப்புற இலக்கிய வளர்ச்சியில் சில சரிவுகளை ஏற்படுத்தி வருகின்றன என்பதும் கவனிக்கத்தக்கது ஆகும். இந்தக் கட்டுரையில் புதுக்கவிதையில் பயன்படுத்தப்பட்டுள்ள நாட்டுப்புறவிய லின் கூறுகள் மட்டும் எடுத்தாயப்பட்டுள்ளன.

**வழிப்பாட்டுப் பாடல்:-**

கிராமிய மக்கள் எச்செயலைத் தொடங்கினாலும் கடவுளை வழிபட்டுத் தொடங்குவதை ஒரு மரபாகப்போற்றி னர். அந்த மரபைப் பின்பற்றி நாட்டுப்புற கதைப் பொதி பாடல்களையும், தெருக்கூத்தினையும் அரங்கேற்றம் போது முதலில் கடவுளை வணங்கிப் பாடும் வழிபாட்டு மரபைப் புதுக்கவிதைக்குள்ளும் வரச்செய்துள்ளார் கவிஞர் சிற்பி, அகலிகையின் கதையைக் கவிதையாக்கும் போது,

'மண்ணை வணங்குகிறேன்
மண்ணை வணங்குகிறேன
கல்லின் கதை சொல்ல—வெறும்
கல்லின் கதை சொல்ல'

என்று பாடி மரபைப் போற்றியுள்ளார்.

**நாட்டுப்புறக் கதை:**

கவிஞர் சிற்பி நாட்டுபுறக் கதைப் போக்கினைப் புதுக் கவிதையில் கிரர்மிய மக்களின் வாழ்க்கையைப் வெளிப் படுத்தப் பல கோணங்களில் கையாண்டுவ்ளார்.

'பூவே புளியம் பூவே' என்ற கவிதையை நாட்டுப்புறப் பாங்கில் அமைத்துப் பித்தி பொன்னாத்தாளுடைய வாழ்வின் சோகத்தைக் எடுத்துக்காட்டியுள்ளார். விறகு வெட்டி சின்னப்பனின் மனைவி, குழந்தை பொன்னாத்தாளைப் பெற்றப் பின் சிறந்து விடுகின்றாள், பொன்னாத்தாள்எ பூப்போதும் மோகம் கொண்டு பூச்சூடி மகிழ்கின்றாள். இதைக் கவிஞர்,

ஏழைப்பெண்-தலையில்
எப்போதும் பூப்பாரம்
இவளோ தகப்பனுக்கு
எப்போதும் மனப்பாரம்'

என்று கவிதையாக்கியுள்ளார். பொன்னிக்கு நிச்சயத் தாம்பூலத்தன்று தலை நிறையப் பூச்சூட நினைத்துப் பக்கத்தில் இருந்த புச்சையப்பன் தோட்டத்திற்குச்

செவந்திப்பூச்சூட ஓடுகின்றாள். அத் தோட்டத்தில் குடி வெறியில் இருந்த பச்சையப்பன் பொன்னாத்தாளைப் புண்ணாத்தாளாக்கி விடுகிறான். மகளைக் காணவில்லையென்று ஓடி வந்த சின்னப்பன் அந்த விகாரக் காட்சியைக் கண்டு பச்சையப்பனைச் சின்னப்பன் கோடாரியால் வெட்டிக் கொல்கின்றான் மகள் பொன்னாத்தாளின் மங்களக்கயிறுக்காக வாழ்ந்த சின்னப்பன் தூக்குக்கயிறில் தொங்கிய காட்சியைச் சொல்ல வந்த சிற்பி,

'மகளுக்குக் கிடைக்காத
மங்கலக் கயிறு
அவனுக்குக் கிடைத்தது.
கோவைச் சிறையில்'

என்று பொன்னாத்தாள் கதையின் முடிவைச் சொல்லியுள்ளார். இக்கவிதையில் நாட்டுப்புற மக்களின் வாழ்வில்ஏற்பட்டக்காயத்தை நாட்டுப்புறக் கதையாகப் பிரதிபலிக்கச் செய்துள்ளார் சிற்பி.

கவிஞர் பஞ்சு 'மூலதனம்' என்றக் கதைக் கவிதையில் நாட்டுபுறக் கதையினை மீட்டுருவமாக்கியுள்ளார் என்பர் விமர்சகர் பாலா.

அழகாபுரி அழகுக் கிழவி மான், நரி என்ற இரண்டு வேலைக்காரர்களை வைத்திருந்தாள் இதில் மான் உழைப்பாளிக்கும், நரி உழைப்பை உறிஞ்சும் உல்லாச வாசிக்கும் குறியீடுக்ஆகியுள்ளார். முதலில் கிழவி மானை உண்மையான உழைப்பாளி இல்லை என்று புறத்தோற்றத்தால் மயங்கி நரிக்கு விருந்து படைக்கின்றாள். காலப் போக்கில் நரியின் போலித்தனத்தையும், தந்திரத்தையும் கண்டு கொண்ட கிழவி. மானிற்கு சோறிட்டு நரியின் வாயில் கல்லைத் தூக்கிப் போடுகின்றாள். இந்தச் சதியை உடைக்க நரி மானைக் கண்ணைப் பிடுங்கித் தின்ன வைக்கிறது. மேலும் அது மானைக்கிணற்றுக்குள் விழச் செய்தும்,கல்லால் எறிந்தும் பாதி உயிரைப்பறித்தது.

ஊருக்குள் ஓடிப்போய் மான் கிணற்றுக்குள் விழுந்து விட்டது. என்று ஒப்பாரி வைக்கிறது. ஊரார் ஓடி வந்து மானைத் தூக்கி வெளியில் போட்டுச் சுடுவதற்குத் தீயைத் தேடுகின்றனர். அந்த நேரத்தில் நரி மீண்டும் ஒரு சதி செய்து தீயைக் கொண்டு வந்து பெரும்பங்கு கேட்கிறது.

இந்தக் கதையில் உழைப்பாளியாகிய மானைத் தந்திர வாதியாகிய நரி ஏமாற்றுவதும் அந்தத் தந்திரத்தில் கிராமிய மக்களும் சேர்ந்து கொள்ளும் அறியாத்தனத்தைக் குறிப்பிட்டுள்ளார். பெரும் பங்கு கேட்ட நரிக்கு ஊரார் கொடுக்க மறுத்ததால் தீயைத் திரும்ப வாங்கி ஊரையே தீக்கிரையாக்கியது. ஒரு தந்திரவாதியாகிய நரியின் சதியால் பாட்டாளி அழிவதையும், அப்பாவி மக்கள் எரிவதையும், தந்திரவாதிகள் உண்டு கொழுப்பதையும் குறிப்பிடும் போது

‘ஒரு மானையும் ஒன்றாய்த் தின்றதால்
வெளுக்கும் விடியலில்
செரிக்காமல் திணறிப்போய்
முணுமுணுத்துத் கிடந்தது’

என்று காட்சி ப் படுத்தியுள்ளர்.

## நாட்டுப்புறப்பாடல் :-

கவிஞர் சிதம்பரநாதன் எழுதிய 'அப்பாவி' என்னும் கவிதையில் கோழி திருடியதற்காகக் குற்றம் சாட்டப்பட்ட குறவனும், குறத்தியும் நீதிமன்றத்தில் நிறுத்தப்பட்டபோது

‘எங்களுக்குத் தெரியாது ஏசமா
கோழி திருடவில்லை நெசமா
காளான் குழம்பு வச்சா வாசம்
கோழிக் குழம்பாட்ட வீசும்’

என்று முறையிடும்போது நாட்டுப்புறப் பாடலில் பதிலளிக்கின்றனர்.

கவிஞர் சிற்பி பாடுபடும் பாட்டாளிகள் நாற்றுநடும் போது, ஏற்றம் இறைக்கும் போது வேண்டியோட்டும் போது, களையெடுக்கும் போது பாடிய பாடல்களை அடுக்கி,

'பாடுபடும் கரங்களிலே
பாக்கு வெற்றிலை ஆவேன்
நாற்றுநடும் ராமாயி
நாவிலொரு தேனாவேன்
ஏற்றம் தொடும் மாசாணி
தோளிலொரு கிளியாவேன்
சாலைகளில் மாட்டு வண்டிச்
சலங்கைகளில் கொஞ்சி நிற்பேன்
களையெடுக்கும் கூந்தலிலே
காற்று வந்து கதையுரைக்க
……… ……………………………
தெம்மாங்காய் விம்மி நிற்பேன்'

என்று நாட்டுப்புறப் பாடல்களைப் பொள்ளாச்சியைச் சுற்றியுள்ள கிராமங்களின் பின்னணியில படைத்துள்ளார்.

## உரையாடல் :

நாட்டுப்புற இலக்கியப் பாங்கில் இருவர் நாடகப் பாங்கில் உரையாடிப் பாட்டுப்பாடுவர். இந்தப் போக்கினைக் குற்றாலக் குறவஞ்சியில் சிங்கனும் சிங்கியும் உரையாடிப் பாட்டுப் பாடுவது போல் அமைத்துள்ளார் திரிகூடராசப்பக்கவிராயர், இதைப் போலவே புதுக் கவிதைக்குள்ளும் இருவர் உரையாடி பாட்டுப்பாடும் நாடகப் போக்கில் பலர் புதுக்கவிதைகளைப் படைத்துள்ளனர்.

சக்திக்கனல் கொல்லிமலையில் கொக்கு வேட்டையாடப்போன அவனும், அவளும் உரையாடிப் பாட்டுப்பாடி எண்ணத்தையும், எதிர்பார்ப்பையும் வெளிப்படுத்துகின்றனர்.

அவள் : ' அண்ணன்மாரு சாமிகோயில்
அழகு ரதம் வடம் பிடித்து
அழகு மயில் ஆட்டம் பார்க்க வாரியா ?
அவன் : கைத்திறனால் நாட்டு மண்ணைத்
தங்கமாக்க உறுதி கொண்டு
கடும் உழைப்புக் கரங்கள் தூக்க வாரியா ?

இந்த உரையாடலில் அவள் சாமி கும்பிட அழைக்க, அவனோ பாடுபட்டு நாட்டை உயர்த்தும், உழைப்புக் கரங்களாக வேண்டுமென்கிறான்,

கவிஞர் ஞானக்கூத்தன் தேரோட்டம் காணவந்த ஊராரைப் பார்த்து

'இளநீ சீவி வெச்சு
இரும்பாக கரும்ப வெச்சுக்
குளிராப் பால வெச்சுக்
குமரன் சாமி கிட்ட
வரங் கேட்டு வாரீங்களா'

என்று விளித்துப் பாடுகின்றாள், இது கிராமியத்தின் திருவிழாக் காலங்களில் பாடும் பாடலின் பிரதிபலிப்பாக விளங்குகின்றது.

## தாலாட்டு :-

தாலாட்டு என்பது கிராமிய மக்கள் தொட்டிலே குழந்தையை ஆட்டும் போது நாவையாட்டிப் பாடும் ஒருவகைப் பாடலாகும். இந்தத் தாலாட்டில் குழந்தைகளுக்கு வீர தீரத்தையும், வரலாற்றையும், தியாகத்தையும் உணர்த்த விரும்பிய கிராமியத் தாய்மார்கள் தாலாட்டுப் பாடலைப் பாடியுள்ளனர். பிறகு இந்தத் தாலாட்டைக் கண்ணனுக்குப் பெரியாழ்வாரும், குலசேகர ஆழ்வாரும் பாடுவது இலக்கியத்தில் வந்துள்ளது. பிள்ளைத்தமிழ் இலக்கியத்தில் தாலாட்டு ஒரு பருவமாகப் பாடப்பட்டுள்ளது.

இந்தியாவில் ஏற்பட்டு வரும் அரசியல் சரிவையும், தியாகமற்ற அரசியல்வாதிகளின் போக்கையும் வெளிப்

படுத்த விரும்பிய சக்திக்கனல், 'அரசியல் வாதிக்கு ஒரு தாலாட்டு' என்னும் கவிதையைப் பாடியுள்ளார்.

'ஆராரோ ஆராரோ
அப்பா நீ கண்ணுறங்கு
தார்ரோட்டில் கார் ஓட்டும்
தமிழ்மணியே கண்ணுறங்கு !
நாடே பரிசளிப்பு - உனக்கு
நன்கொடையே மூலதனம்
பாடுபடத் தேவையில்லை—என்
பாண்டியனே கண்ணுறங்கு !'

இத் தாலாட்டில் பரிசளிப்பாலும், நன்கொடையாலும் பாடுபடாமல் முதலாளியாகி வரும் அரசியல்வாதிகளைச் சாடியிருக்கின்றார் சக்திக்கலை.

கவிஞர் தமிழன்பன் குப்பைத்தொட்டியில் பெற்ற பெண்குழந்தையை வீசி விட்டுப் போகும் வேதனையை மையமாக வைத்துக் கட்டிடப் பெண்கள் பாடும் தாலாட்டுப் பாடலைப் பாடியுள்ளார்.

'ஆராரோ ஆரிராரோ
அழகுநிலா கண்ணுறங்கு
ஆராரோ ஆரிராரோ
அச்சுமயில் கண்ணுறங்கு
குப்பையிலே கண்டெடுத்த
குண்டுமணியே என்
தப்பில்லாத் தெம்மாங்கே
தாலே தாலேலோ
எவள் உன்னைப் பெற்றாளோ?
ஏன் வெறுத்துப் போனாளோ?

என்ற கேள்வியால் பெண் சிசுக்கொலையைக் கண்டிக்கிறார்.

புவியரசு,'தூங்காத ஒரு தாலாட்டு'என்னும் கவிதையில் வறுமையோடு வாழும் மக்களையும், அந்த வறுமையைப்

போக்க கண்விழிக்கவேண்டியக் காலத்தையும் குறிப்பிட்டுப் பாடியுள்ளார்.

'ஏழுகடல்தாண்டி—உங்கப்பன்
ஏலக்காய் மலையேறி
பசியாப் பழம்பறிக்கப்
போயிருக்கார் கண்ணுறங்கு!
கண்விழித்துப் பார்த்தாலோ
காரணங்கள் புரிந்துவிடும்
காரணங்கள் புரிந்தாலோ
கனலாக நெஞ்செரியும்
..............................
நேரமின்னும் வரவில்லை!
.........................................
.........................................
கண்ணுறங்கு? கண்ணுறங்கு!
காலம் வரும்! கண்ணுறங்கு!'

என்பதில் விழிப்புணர்ச்சியைப் பெற்று உரிய காலத்தில் உரிமைக்கும், வாழ்வுக்கும் கனலாக மாறவேண்டும் என்ற எதிர்பார்ப்பையும் முன் வைத்துள்ளார்.

வரி ஏய்ப்பவர்களைச் சாடும் கவிஞர் தேனரசன் 'ஒரு வேண்டாத தாலாட்டு' எனும் தலைப்பில் கவிதை பாடியுள்ளார்.

'உன்னுடைய ராசாங்கம்
உன்னுடைய மந்திரிமார்
என்ன குறையுனக்கு
இப்படியே கண்ணுறங்கு'

இத்தாலாட்டில், ஆட்சிகளாலும், அமைச்சர்களாலும் வரி ஏய்ப்பவர்களை மிகவும் கூர்மையாக அடையாளம் காட்டியுள்ளார்.

ஏ. தெ. சுப்பையன், விடுதலைக்குப்பிறகும் 'சோசலிசத் தாலாட்டுப் பாடியிருக்கிறார்.

‘ தரையெல்லாம் மேடுபள்ளம்
தாயார்க்கு உறுத்துன்னு
தரைமொழுகிச் சமமாக்க
தவமாய் தவமிருந்து
சமத்தாய் பிறந்த கண்ணே !’

இத்தாலாட்டு சமத்துவச் சமுதாயத் தேடலை முன் வைத்துள்ளது.

ஆனால் பாரதிதாசன் உறங்குவதற்காகப் பாடியத் தாலாட்டு மரபினை மாற்றி மூடப்பழக்கத்தில் உறங்கிக் கிடக்கும் சமுதாயத்தை விழிக்கச் செய்ய ஆண்குழந்தை தாலாட்டு, பெண்குழந்தை தாலாட்டு என்ற புதிய போக்கினைத் தோற்றுவித்துள்ளனார். புதிய யுகத்தையும், புதிய மானுடத்தையும் படைக்க விரும்பிய புதுக்கவிஞர்கள் இந்தப் புதிய போக்கைப் பயன்படுத்தியுள்ளார்.

புதுக்கவிஞர்கள் தாலாட்டுப்பாடலைச் சமூக, அரசியல், பொருளாதார மாற்றங்கள ஏற்படுத்தவும், மானுடம் விழிப்புணர்வு பெறவும் பயன்படுத்தியுள்ள பாங்கினைச் இச்சான்றுகளால் அறியலாம்.

**ஒப்பாரி :-**

ஒப்பாரி என்பது நாட்டுப்புறவியலில் இறப்புக்கள் நிகழும்போது கிராமியப் பெண் மக்கள் அவர்களின் அவல உணர்வை வெளிப்படுத்திப் பாடும் பாடல் வகையாகும். இது நாட்டுப்புறவியலில் தனித்தன்மை மிக்க பாடலாகும். இப்பாடலைக் கேட்கும் கல்நெஞ்சத்தாரையும் கண்ணீர் வடிக்கச் செய்யும்.

ஒப்பாரிப்பாடல்கள் இன்னும் கிராமங்களில் ஒலித்துக் கொண்டு தான் இருக்கின்றன. இப்பாடல் போக்கினைப் புதுக்கவிஞர்களும் அப்படியே பின்பற்றிப் பாடியுள்ளனர்.

‘மழை’ என்ற தலைப்பில் சிற்பி,

‘மண்ணாப் போன மக
கண்ணால மாகலியே

கண்ணாலமாகலியே- அவ
கன்னி கழியலியே'

என்ற ஒப்பாரிப்பாடலில் மழையின்மையால் மாண்ட மகளை நினைத்துப் பாடுகிறார்.

'ஒரு சேரிக் கிராமமும் தபால்காரனின் மரணமும்' என்னும் கவிதையில் நா. காமராசன்

'எழுத்துச் சுமைகாரர்
எங்க ஊரு தபால்காரர்
எழுத்து மங்கும் சாயங்காலம்
எமனோடு போனதென்ன ?

என்பதில் அக்கிராமத்துக்கு வரும் தபால்காரனின் மரணத்துக்காக அந்த மக்கள் வடித்த கண்ணீர் சோகத்தை ஒப்பாரியாக்கியுள்ளனர்.

**விடுகதை :**

பழங்காலத்தில் நாட்டுப்புறவியலில் விடுகதையும் ஒரு அங்கமாக விளங்கியது. இதைப் பொழுதுபோக்காகவும், விளையாட்டுக்காகவும் பயன்படுத்தியுள்ளனர், ஆனால் புதுக்கவிஞர்கள் விடுகதையைச் சமூக அவலத்தைச் சுட்டிக் காட்டப் பயன்படுத்தியுள்னர்.

'விடுகதை' என்ற தலைப்பில் கந்தர்வன்.

' இந்த தேசத்திலேயே
மிகவும் உயர்ந்தவன்
கிராம வாசியா
நகர வாசியா
இல்லை
விலைவாசி'

என்று பதில் சொல்லியுள்ளார்.

இதே போன்று புதுக் கவிதைகளில் கும்மி. பழமொழி போன்ற நாட்டுப்புறக் கூறுகளும் புதிய நோக்கில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

திரைப்படச் சுவரொட்டிகளை
நகர மாடுகள்
தின்கின்றன.
சுவரொட்டிகள்
நகரத்தையும்
கிராமத்தையும்
தின்கின்றன.

— சுபாசு

# 9. சமுதாயப் பார்வை

'கவிதை என்பது வாழ்வின் விமர்சனம்' என்கிறார் மாத்யூ ஆர்னால்டு. இக்கொள்கையின்படி புதுக்கவிஞர்கள் வாழ்வை விமர்சனம் செய்து ஒரு நல்ல வாழ்விற்கு வழி காட்டத் தன் கவிதைகளைப் பயன்படுத்தியுள்ளனர். இன்குலாப் 'மனிதனைப்பாடுவது; அவன் வாழ்வின் மறு மலர்ச்சிக்குத் தன் கவிதையைச் சமர்ப்பணம் செய்வது' கவிதை என்கிறார். அவர் தன் முன்னுரையில், 'சேரிகளின் நலங்களில் - வயல்வெளியின் புலம்பல்களில்

ஊர்வலங்களில் - ஊமை முழக்கங்களில் எந்த ராகங்களை இசைத்துச் சென்றோமோ அந்த ராகங்களுக்கு நான் வீணை மீட்டுகிறேன் - நீங்கள் கற்றுத்தந்ததை யான் கவிதை யாக்குகிறேன்' என்று கவிதையின் பாடு பொருள் விளக்கத்தையும் எழுதியுள்ளார். கவிஞர் மீராவும் பொன் னுக்கோ, புகழுக்கோ கவி பாடாமல் மனிதச்சாதியின் புகழுக்குக் கவிபாடவேண்டுமென்கிறார். அதனால்தான் அவர், சமுதாய நடைபாதையைச் சீராக்கி ஆரோக்கிய சமுதாய வாழ்விற்காக, சட்டத்தின் தீநாக்குகளுக்குத் தப் பிய தடித்த தோலர்களுக்கு ஊசிகள் போட்டுள்ளார். நா. காமராசன் அவர்களும்,

> "ஓ! எங்கள் உழைப்பாளித் தோழர்களே!
> இனிமேல் என் கவியெல்லாம் சமூகத்தின்
> இருட்டறையைச் சுட்டெரிக்கும்"

என்று உறுதி எடுக்கிறார். புவியரசு,

> "என் தாயகத்தின் கோடானு கோடி
> தரித்திர நாராயணர்களின்
> ரத்தவியர்வையில் தொட்டு எழுதிய
> என் சிவப்புக் கவிதை

என்று பாடியுள்ளார், புதுக்கவிதைகளின் சுருதி மக்களின்

> 'நல்வாழ்வின் ஆத்ம சுருதியை'

மீட்ட முயல்கிறது.

**சுதந்திரம் :**

இந்திய நாடு சுதந்தரம் அடைவதற்கு முன்பே,

> 'ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே
> ஆனந்த சுதந்திரம்
> அடைந்து விட்டோமென்று' பாடி

சுதந்திரத்தைக் காணாமலே மறைந்து போனான் பாரதி. சுதந்திரத்திற்குப்பின் இந்திய மக்கள் வாழ்வில் ஆனந்தம் காண முடியவில்லை. சுதந்திரம், ஆனந்த வாழ்விற்குப்

பதிலாகச்சோக வாழ்வை மக்களுக்குச் சொந்தம் ஆக்கியது. இச்சோக வாழ்வு புதுக்கவிஞர்களின் உள்ளத்தைப் பெரிதும் பாதித்ததால்,

'இரவில் வாங்கினோம்
விடியவே இல்லை'

என்று அரங்கநாதனைப் பாடவைத்துள்ளது. அப்துல் ரகுமான்,

'வைகறையாக - உன்னை வார்த்து
உப்பரிகை மட்டும் - உறிஞ்சிக்குடிக்கவோ'

என்று சுதந்திர தேவதை இன்று உப்பரிகையில் உலாச் செல்லும் காட்சியைக் காட்டுகிறார். மார்க்சீயக்கொள்கையை மிகுதியாகப் பாடியுள்ள பரிணாமன்.

''இன்றுங்கூட -
சுதந்திரத்திற்காகச் சிந்தப்பட்ட
ரத்தங்களின் தொடர்ச்சியாகி விட்டோம் !
தேசத்திற்கு நாம் கிடைத்துவிட்டோம்
ஆனால் இன்னும் தேசம் நமக்கு கிடைக்கவில்லை''

என்று நாட்டிற்கு நாம் கிடைத்தும் நாடு நமக்கான வாழ்வை அளிக்கவில்லையே என்ற அதிருப்தியை வெளிக்காட்டியுள்ளார் 'நாளை விடியும்' என்று எண்ணிய மக்களை 'என்று விடியுமோ' என்று எண்ண வைத்து விட்டது. அதைத்தான் ஜெகனாதராஜா,

''நேற்றுப் போலவே இன்றும்
இன்றுபோலவே நாளையும் என்றால்
நாளை எதற்கு ?''

என்ற கேள்வியை எழுப்பியுள்ளார்.

இந்தியாவுக்குச் சுதந்திரம் வந்தும் மக்களுக்கும் வாழ்க்கைக்கும் இன்னும் முழுமையான சுதந்திரம் வரவில்லையென்பதைப் புதுக்கவிஞர்கள் கவிதைகளில் விமர்சித்துள்ளன.ர்

' செங்கோட்டையில்
எங்கள் கொடி
ஏறிய போது
எங்கள்
குதிரைகளிலிருந்து
அவர்கள்
இறங்கினார்கள்
குதிரையின் மீது
தாங்கள்
சவாரி செய்யவில்லை
எங்கள் மீதுதான்
அது சவாரி செய்கிறது
என்று !

இந்தக் கவிதையில் கவிஞர் மேத்தா இந்தியாவின் சுதந்திரம் இந்திய மக்களுக்குள் ஊடுருவாமல் இருப்பதை விவரித்திருக்கின்றார். அதோடு சுதந்திரம் எல்லோருக்கும், எங்கும் போய்ச் சேராமல் அதிகாரத்தனம் செய்வதையும் அடையாளம் காட்டியிருக்கின்றார்.

**பசிக்கொடுமை :**

'ஐயா பசி' என்னும் தேசீய கீதம்தான் ஒலித்துக் கொண்டே யுள்ளது என்று கூறும் சக்திக்கனல்,

'உணவுப் பிரச்சனை உண்மையில் இல்லை
பாரகன் எச்சில் பிரியாணிப் பொட்டலம்
எலும்புகள் எல்லாம் இவன் பசியாற்றின'

என்ற வரிகளில் எச்சில் இலைக்குப் போராடும் இந்நாட்டு மன்னர்களின் அவலநிலையைக் காட்டுகிறார். மேத்தாவும்,

'எங்கள் வாழ்க்கை இருட்டோடு
இல்லறம் நடத்துகிறது'
'இருபத்தைந்து ஆண்டுகளில்
தேசத்தில் மாற்றமில்லையென்று

யார் சொன்னது?'
ஆபுத்திரனே!
அமுத சுரபியைத்தான்
நீ தந்துசென்றாய்
இப்போது
எங்கள் கையிலிருப்பது
பிச்சைப் பாத்திரம்'.

என்று தேசபிதாவிற்கு ஒரு தெருப்பாடகனின் அஞ்சலியில் தெரு வோர ராஜாக்களின் நிலையைப் பாடியுள்ளார்?

''நாங்கள் பசியை விரட்டுவது
எப்படித் தெரியுமா?
பட்டினி கிடந்து ......''

என்று பட்டினியால் துயருறும் மக்களைப் பார்த்து தமிழன்பன் பாடியுள்ளார். வள்ளலார், பசிப்பிணியைப் போக்கும் அன்னதானப் பணிசெய்ய வடலூரில் மூட்டிய தீ அணையவில்லையே என்பதை,

வடலூரில் வள்ளலார்
அடுப்பில் மூட்டிய தீ
இன்றைக்கும் எரிகிறதாம்
அந்தத் தீ''

'' என்று பாடி 'அணையட்டும்' என்று கவிதைக்குத் தலைப்பிட்டு மக்களின் வயிற்றில் பற்றிய 'பசித்தீ' அணைய வேண்டும் என்கிறார் துரைப்பாண்டியன்.

''பசி மரண ஊர்வலம் செல்ல,
ஏழைகளின் வயிறு நிறைய,
ஏழைகளின் அடுப்பெரிப்போம் - இல்லையெனில்
சூரியனில் தீக்குளிப்போம்'

என்று சபதம் எடுக்கிறார் நா. காமராசன்.

இந்தியாவின் இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தின் 42-வது பிரிவு உணவு, உடை, உறையுள் ஆகிய மூன்றும்

எல்லாருக்கும் கிடைக்கச் செய்ய வேண்டுமென்று கூறுகிறது. ஆனால், இந்தியாவில் வறுமை வலுவாக வாழ்கிறது என்பதை 'வறுமைப்பாடு' என்ற தலைப்பில் கவிஞர் தமிழன்பன் கவிதையாக்கியுள்ளார்.

'சிலுவையில் அறையப்பட்டதால்
மூன்றாம் நாள்
உயிர்த்தெழுந்தீர்
வறுமையில்
அறையப்பட்டோம்
உயிர்த்தெழுவது ஒரு போதும் இல்லை'.

இக்கவிதையில் சிலுவையில் அறையப்பட்ட ஏசு பிரான் கூட மூன்று நாளில் உயிர்த்தெழுந்து விட்டார் ஆனால், விடுதலை பெற்று இத்தனை ஆண்டுகளாகியும் வறுமை விடுதலை இந்தியர்களுக்குக் கிடைக்கவில்லை என்னும் வேதனையைச் சொல்லியுள்ளார்.

இதேபோல் வறுமையைப் பாடவந்த கவிஞர் இரா. மீனாட்சி.

' இனி சங்கீதமே நம்துணை
நாத இனிமையில் நீளத்தூங்கலாம்.
பசிக்காத பூமிகளுக்குள்
வசிக்கப் போகலாம்'

என்று அழைக்கும் குரலில் மனிதன் வறுமையோடு வாடி மடியும் வருத்தம் தெரிகிறது.

## தொழிலாளரின் அவலநிலை :

''பண்பாடு மிக்க பாரத நாட்டில்
மானுடம் மட்டுந்தான் மலிவாய் போனது'

என்று கூறும் இன்குலாப்,

' தொழிற்சாலைப் பாத்திகளில் வேர்வை நீர் ஊற்றி
இயந்திர ரோஜாக்களை மலர வைத்தோம்

இருந்தும்-வறுமை முட்கள் கீறிய வடுக்களே
பாடுபட்டதற்குக்கிடைத்த பரிசுப் பதங்கள்'

என்றும்

'மாளிகை நிமிர முதுகு வளைந்தது
கோணிப்பைக் கூடாரத்தில் குடும்பம் நடத்திய
கூலிகள் எல்லாம் குளிரில் விறைத்தனர்'

என்றும்

'கோவணங்கட்டி நெசவு செய்கிறார்கள்
கோமளவல்லிகள் பட்டில் புரள்கிறார்கள்'

என்றும்

''காஷ்மீர் பள்ளத்தாக்கில் கனிமரங்களை
வளர்த்துவிட்டு
சஹாராப்பாலைவனத்தில் சஞ்சாரம் செய்கிறேன்
என்னுடைய தாய்ப்பாலை என் உதடு தொடு முன்
பண்ணை நாகங்கள் பருகி முடிக்கின்றன''

என்றும் பாடிய வரிகளில் மாளிகையைக் கட்டிவிட்டுத் கோணிப்பை வீட்டில் குடியிருக்கும் கூலியையும், பட்டாடை நெய்துவிட்டுக் கந்தலாடைகட்டும் நெசவாளியையும், பண்ணைகளில் உழைத்து விட்டுக் கூழுக்கு உப்பின்றித் தவிக்கும் உழவனையும் சமுதாயத்தின் பார்வைக்குக் காட்டியுள்ளார். சமூக மறுமலர்ச்சி கவிதைகள் பாடிய புரட்சிக்கவிஞர் பாரதிதாசன்,

'காண்பதெல்லாம் தொழிலாளி செய்ததாம்-அவன்
காணத்தகுந்தது வறுமையாம்'

என்ற வரியையும் இங்கு நினைக்காமல் இருக்க முடிய வில்லை. தொழிலாளர் நிலையைப்பார்த்த தமிழன்பன்.

'அவர்கள் வேர்வை கடலாகிறது,
அதில் சிலர் வாழ்வு படகாகிறது'

என்கிறார். தொழிலாளர் அவலநிலையை மேத்தாவும், புவியரசும், சக்திக் கனலும், பரிணாமனும் சிற்பியும் பாடியுள்ளனர்.

நீதி :

சுதந்திர இந்தியாவின் 'நீதி' பல புதுக்கவிஞர்களின் கவிதைகளில் விமர்சனத்துக்குள்ளாகியுள்ளது. மேத்தா,

''சட்டக்கட்டிடங்களில்
ஓட்டைகள் விழுந்து விட்டன.
வயதாகிப் போனதால்
தர்மஸ்தூபிகள் தள்ளாடுகின்றன'

என்று நீதியின் போக்கைச் சொல்லியுள்ளார். நீதி தேவனால் புறக்கணிக்கப்பட்ட மக்களை நினைத்த தமிழன்பன்.

'' அவர்கள்
நீதிதேவனின் நீண்ட குறட்டையால்
காதுகள் தொடாத
ஏக்கக் கவிதைகள்''

என்று நீதிதேவனின் நீண்ட குறட்டையைப் பாடியுள்ளார். அதனால் தான் அப்துல் ரகுமான்,

'உன் தராசுத்தட்டுக்களைக்
கொஞ்சம் கண் திறந்துபார்.
அங்கே,
புறாவின் மாமிசத்தை—
சிபிகள் உண்ண ஆரம்பித்து
விட்டார்கள்'

என்று பாடி 'நீதிதேவதையைக்கண்ணைத்திறந்து பார்க்கச் சொல்கிறார். வழக்கு மன்றம் பேசுவதாகக் காட்டும் சிற்பியின் கவிதை அமைப்பு முறை ஒருபுதுமை வேலை அறிவிப்புப்போல் கவிதை எழுதி முடமாகிய நீதியை அறிவிப்பு செய்கிறார்.

'கீழ்க்கண்ட பதவிகளுக்கு என்னிடம்
கீழ்க்கண்டவர்மட்டும் விண்ணப்பம் இடுக.

வழக்கறிஞர் — ஊமைகள்
குமாஸ்தா — கை இல்லாதவர்
சாட்சி — குருடர்கள்
நீதிபதி — காது கேளாதவர்
ஊனமுற்றவருக்கு ஏனிந்தச் சலுகை எனில்
நீதி முடமாகாமல் இருக்க....'

என்று 'வழக்குமன்றம் பேசுகிறது' எனும் அங்கதக் கவிதையில் முடமாகிய நீதிமன்றத்தைக் காட்டுகிறார் சிற்பி.

## அரசியல்

இந்திய அரசியலில் நல்ல தலைவனைத் தேர்ந்தெடுக்கத் தெரியாமல் தவித்துக் கொண்டிருக்கும் மக்களின் நிலையையும் வையகத்திற்கு நல்ல தலைமையில்லாத போக்கையும் எண்ணி ஆண்டவரிடம் வேண்டுகின்றார் கவிஞர் பி. சிதம்பரநாதன்

'திசை தெரியாது
திரிந்துகொண்டிருக்கிறோம்
இறைவா !
எங்களுக்கு
நல்ல மேய்ப்பனைக்கொடு
தூக்கிக் கொள்பவனை எல்லாம்
கர்த்தராகவே கருதும்
எங்கள் குட்டிகளுக்கு
ஆண்டவரே !
எப்போது நீ
புத்தியை வழங்குவாயோ'

இக் கவிதையில் இந்தியாவுக்கு நல்ல தலைமை வேண்டுமென்பதையும், நல்ல தலைவனை அடையாளம் காணும் மக்கள் சக்தி உருவாக வேண்டுமென்பதையும் எதிர்பார்ப்புகளாக்கியுள்ளார்.

கொள்கையும் கோட்பாடுமில்லாமல் வியாபாரத்தன மாய்ப்போன அரசியலை விமர்சனம் செய்கிறார் வைரமுத்து

'இந்திய மண்ணில்..........
வியாபாரஞ் செய்ய வந்தவர்கள்
அரசியல் நடத்தினார்கள்.
இரண்டிலும்...
நட்டப்பட்டது மட்டும்
நாம்தானே இந்தியனே !'

இக்கவிதையில் வணிகத்தனமாக மாறிவிடும் அரசியலில் அன்று முதல் இன்று வரை நட்டப்பட்டு வரும் இந்தியரைக் கணக்கிட்டுக் காட்டியுள்ளார்.

நாட்டையும், நாட்டு மக்களையும் காக்கும் பொறுப்பைத் தலைவர்களிடம் ஒப்படைத்தோம். ஆனால் அவர்கள் அந்தப் பொறுப்பை விட்டு விலகிச் சுயநலத்தில் மூழ்கி மக்களின் வாழ்வில் மிகப்பெரிய சரிவை ஏற்படுத்தி வரும் சூழலைச் சொல்ல வந்த கவிஞர் தமிழன்பன்

'இமைக்ளை
விழிகளுக்கு
காவலாக நிறுத்தினோம்
அவை
விழிகளைக் கொத்தும்
கழுகுகளானால்....?

என்ற கேள்வியால் நம்மைக் கூர்மையாகச் சிந்திக்கத் தூண்டியுள்ளார். இந்தக் கவிதையின் பொருளை ஆட்சியாளர்களும், அரசியல்வாதிகளும் இன்று நீதிமன்றங்களுக்கும், சிறைச்சாலைகளுக்கும் சென்று வரும் காட்சிகளே சாட்சிப்படுத்துகின்றன,

## கல்வி

இந்தியாவில் இன்னும் இந்திய மக்களுக்குரிய கல்வி முறை தோன்றவில்லை. விடுதலை பெற்ற காலந்தொட்டுக் கல்வி முறையில் மாற்றம் வேண்டும் என்ற குரல் ஒலித்துக் கொண்டேயிருக்கிறது. ஆனால், இன்னும் நமக்கான

கல்வி முறையை உருவாக்காமல் ஆங்கிலக்கல்வி முறையில் சில மாற்றங்களை மட்டும் செய்து வந்திருக்கிறோம். இதனால் வளரும் தலைமுறையின் படைப்புத்திறன் சரிந்தும், அழிந்தும் வருகின்றது. இந்த உணர்வுகளைக் கவிதையில்

'படைப்பு அறிவை வெறும்
படிப்பறிவாகப்
பலவீனப்படுத்தும்
கல்வி
கரியைப்
பூமி
வைரமாக மாற்றுகிறது-எமது
கல்வி நிலையங்களோ
வைரங்களைக்
கரிகளாக்கித் தருகின்றன'

என்று கல்வியின் சீர்கேட்டை விவரித்துள்ளார் கவிஞர் தமிழன்பன்.

வாழ்க்கையைப் பதப்படுத்தாமல் சுமைப்படுத்தும் கல்வியைக் கவிஞர் மேத்தா

'முதுகில் ஒரு மூட்டை' என்கிறார்,
' மேதைகள்-
இப்போது
சீதைகள் மாதிரி
சிறையிருக்கிறார்கள்
அசோக வனத்திலல்ல...
சோக வனத்தில்
கல்வி இங்கே
இதயத்தில் சுமக்கும்
இனிமையாய் இல்லாமல்
முதுகில் சுமக்கும்
மூட்டையாகி விட்டது..
கொடுமை என்னவென்றால்

குழந்தைகளெல்லாம்
கூனிகளாயினர்'

இக்கவிதையில் கல்விமுறை குழந்தை பருவந்தொட்டே கொடுமை செய்யத் தொடங்கி விட்ட வேதனையைப் புலப்படுத்தியுள்ளார்.

இதைத்தான் கவிஞர் சிற்பி 'பள்ளிக்கூடம்' என்ற கவிதையில்

'சூரியக் குஞ்சுக்கு
மறுபடியும் ஒரு
கருவறை வாசம்
ஆண்டுக் கணக்கில்...'

என்று சுட்டிக்காட்டியுள்ளார்,

## மாசும்—சூழலும்

இப்போது எங்கும் சுற்றுப்புறச்சூழல் பாதுகாப்பைப் பேசி வருகின்றனர். சென்னையில் வாழ்ந்து வரும் கவிஞர் தமிழன்பன் மாசுபட்டு வரும் சென்னை நகரை விமர்சித்துச் 'சென்னை மிதக்கும்' என்றும் கவிதையைப் படைத்துள்ளார்,

இதில் மனிதன் சுவாசிக்கும் காற்றும், சூழலும் மாசு படுவதால் மனித வாழ்வு மாசுபடுவதைமிகவும் எதார்த்த மாக எடுத்துக்காட்டியுள்ளார்.

'மனிதனை
முந்திக் கொண்டு
இந்த மாநகரில்
காற்று ஒருநாள்
மரணிக்கும் '

இதில் மாசுத்தன்மையின் உச்சக்கட்டத்தில் 'காற்று ஒரு நாள் மரணமடைந்து விடும்' என எச்சரித்துள்ளார்.

## தேசத்தில் அவலம்

விடுதலை பெற்ற இந்தியாவில் சாதிச்சண்டையாலும். வறுமையாலும், வேலையின்மையாலும் தேசம்காயப்பட்டுக் கிடப்பதைக் கவிஞர் அறிவுமணி நெஞ்சைச் சுடுவதுபோல் கடித அமைப்பில் விடுமுறை விண்ணப்பம்' என்ற கவிதையை எழுதியுள்ளார்

கே. குப்புசாமி
ஆறாம் வகுப்பு (சி பிரிவு) தேதி
அரசு மேல்நிலைப்பள்ளி 15 ஆகஸ்ட் 1983

மதிப்புள்ள வாத்தியாருக்கு ..

'நேத்து ராத்திரி
என்னோட அப்பாவை
யாரோ சாதிச் சண்டையிலே
அடிச்சிக் கொன்னு எரிச்சிட்டாங்க;
அம்மா உடம்பு சரியில்லாம
தர்ம ஆஸ்பத்திரியில
படுத்துருக்காங்க
வேலை தேடி
பட்டணம் போன அண்ணன்
இன்னமும் வீடு திரும்பல;
வயசுக்கு வந்த
என்னோட அக்காவையும்
நாலு நாளா காணலே;
என்னோட டவுசர்
பின்பக்கமும் கிளிஞ்சி போயிடுச்சு
அதனால ஐயா
இன்று நம் பள்ளியில
நடைபெறும் சுதந்திர தின விழாவில
கொடியேத்த மந்திரி வரும்போது
என்னால வர முடியாது !'

இப்படிக்கு
உங்கள் கீழ்படிந்துள்ள மாணவன்
கே, குப்புசாமி

இக்கவிதையில் தேசத்தின் அவலத்தைக் குப்புசாமியின் கடிதம் எதார்த்தமான முறையில் காட்சிப்படுத்தியுள்ளது

இந்தியாவில் சமுதாய வீதிகளில் நடைபெற்றுவரும் மதக்கலவரங்களைக் கண்ட கவிஞர் அப்துல் ரகுமான் 'தவறான எண்' என்ற கவிதையில் ராம் - ரஹீம் ஆகிய இருவரும் மனித நேயத்தை உரையாடும் பேச்சுக்கவிதையைப் படைத்துள்ளார். ஆனால் இந்தியர்கள் இன்னும் மத பேதத்தால் காயம்பட்டுக் கொண்டே இருக்கிறார்கள், இந்தப் போக்கை மாற்ற விரும்பிய கவிஞர்

'ஆலய மணி ஓசையும்
மசூதியின் அழைப்பொலியும்
காற்றில் கரைந்து சங்கமிக்கும் அர்த்தம்
இவர்களுக்கு எப்போது விளங்கும்'

என்ற எதிர்பார்ப்பைச் சொல்லியுள்ளார்.

இன்றைய இயந்திர வாழ்க்கையைக் கவனித்துவரும் கவிஞர் தமிழன்பன் இந்திய மக்கள் மக்களாக வாழாத நிலையைப் 'பாரத தேவி' பேசுவது போல் கவிதையாக்கியுள்ளார்.

'எனக்கென்று கொடியுண்டு,
பாடல் உண்டு,
பறவை உண்டு
எனக்கென்று மக்கள்தான் இல்லை'

என்பது பாரத தேவியின் முறையீடாகும். ஆனால் அடிப்படைத் தேவைக்கும், அரிசிக்கும் அலைந்து திரியும் இந்தியர்கள் இந்தியாவை இதயத்தில் எப்படி ஏற்க முடியும் என்பதை

'இதெல்லாம்
அறிவதற்கு நேரமில்லை அம்மா!
அரிசி எண்ணெய் சர்க்கரை

வரிசையில் மிதிபடவே-வாழ்க்கை
சரியாய் போகிறது' என்று

எதார்த்தமாகக் காட்சிப்படுத்தியுள்ளார்.

இந்திய நாடு ஒருமைப்பாட்டைப் போற்றும் நாடு. இந்த நாட்டில் ஓடிவரும் நதிகளனைத்தும் இந்தியர்களுக்குப் பொதுவானவை. இதைத்தான் மகாகவி சிந்து நதியின் மிசை நிலவினிலே' என்ற பாட்டில் விவரித்துக் காட்டியுள்ளார். இன்றைக்கு நதிநீர்பங்கீட்டில் சிக்கலும், போராட்டமும் ஏற்பட்டிருக்கிறது. இந்தப் போக்கினை வெளிப்படுத்த விரும்பிய கவிஞர் தமிழன்பன்,

'மண்நனைத்து
வருவதற்கு மாநிலத்தில்
நதிகளுண்டு - ஆனால்
மனித மனங்களில்
சஹாரா ஏன்
ஜெராக்ஸ்
செய்யப்பட்டது !

என்ற கேள்வியை எழுப்பியுள்ளனர். இந்தக் கேள்வியை அரசியல்வாதிகளும், ஆட்சியாளர்களும் புரிந்து கொண்டால் நமக்கு நதிநீர்ப் பங்கீடும் கிடைக்கும், நாட்டில் ஒருமைப்பாட்டு உணர்வும் உறுதிப்படும் பாரதியின் கனவும் நனவாக்கப்படும்.

நம் சனநாயகம் அரசியல் ஆதிக்க சக்திகளுக்குள்ளும், பணநாயகத்துக்குள்ளும் சிக்கித் தவிக்கும் அவலத்தைக் கவிஞர் சுபாசு;

'பாரத தேவியே !
உன் மகுடம்
இப்போது
அரசியல் கோட்டைக்குள்ளும்
மாளிகைக்குள்ளும்
அடகு கிடக்கிறது;

அதனால்
நாங்களும்
அடகு கிடக்கிறோம்' என்கிறார்.

இதில் சனநாயக மரபு மீட்பும், அம்மரபில் மக்களுக்கு ஆனந்த சுதந்திர வாழ்வும், விடுதலையும் வேண்டுமென்பது தொனிக்கிறது.

'கிராமியத்தின் கௌரவத்தை
அரசு அசலாக்கும்போது
விடியும் காலமே
ஒரு கிராமத்தின்
விடியல்'

என்பதில் அரசின் திட்டங்கள் கிராமிய வாழ்க்கையின் பல களங்களில் ஊடுருவிப் புதிய வாழ்வின் புனரமைப்பைச் செய்வதே கிராமத்தின் விடியல் என்று தீர்மானிக்கிறார் சுபாசு.

சமூகப் பாதிப்பின் பதிப்புக்களே இன்றைய புதுக் கவிதைகள். அவைகள் ஓடாத உணர்வு இரதங்களை ஓடவைக்கும் புதிய முகவரிகள்.

''நாளை இந்தியாவின்
தேசீயக் கொடி – நமக்காகப் பறக்கட்டும்:'

என்னும் பரிணாமனின் எதிர்பார்ப்பு நிறைவேற நமக்கான உலகம் நாம் படைக்க நாம் அனைவரும் ஒன்று சேருவோம். புதிய சமுதாயம் அமைப்போம்'

'புதிய சமுதாயம்
வேண்டுமென்றால்
புல்லாங்குழல்கூட
ஒரு நாளில்
போர் வாளாகலாம்'

என்று நம்பிக்கையூட்டிய வேலுச்சாமியின் கவிதை நனவாகட்டும். ●

''நீயும் நானும்
திசைகளை மறந்தபோது
வடக்கும் கிழக்கும்
தெற்கும் மேற்கும்
எல்லா இடத்திலும்
சூர்யோதயங்கள்''

— சிற்பி

# 10. பெண்ணுரிமை

உரிமையும், கடமையும் ஆண்களுக்கும் பெண்களுக்கும் இயல்பாகவும், சமமாகவும் அமையவேண்டும். ஆனால் சமய ஆதிக்கமும், பொருளாதிக்கமும், அரசியல் ஆதிக்கமும், ஆண் ஆதிக்கமும் உருவானபோது சமூக வாழ்விலும், குடும்ப வாழ்விலும், தனிமனித வாழ்விலும் பெண்களின் வாழ்வில் பேதமும், ஒரு தாழ்வும், உரிமை மறுப்பும் ஏற்பட்டன. இவற்றை எதிர்த்து இராசாராம் மோகன்ராய், பாரதியார், பெரியார், பாரதிதாசன் முதலியோர் பெண்களின் உரிமைக்கும், வாழ்வுக்கும் பாடுபட்டுள்ளனர். பெண்

ணுரிமையை நிலைநாட்டச் சட்டங்கள் இருந்தாலும் நடைமுறையில் பெண்ணுரிமை என்பது பல இடங்களில் கனவாகவும், இலட்சிமமாகவும், சில இடங்களில் அடையாளமாகவும் தான் வெளிப்படுகின்றன. இச்சூழலில் புதுக்கவிதை கூறியுள்ள பெண்ணுரிமை இக்கட்டுரையில் எடுத்துக்காட்டப் பட்டுள்ளது.

## நேற்றைய இலக்கியத்தில் பெண்:

சங்க இலக்கியத்தில் இளங்கீரனார் பாடிய,

“ ...... ... ............உள்ளிய

வினைமுடித் தன்ன இனியோள்” (நற்றிணை)

என்பதில் பெண்மையைப் போற்றி வாழ்ந்துள்ளதை அறியலாம்.

சிலப்பதிகாரத்தில் கண்ணகி, கோவலனின் சோதனையான நேரத்தில் ‘சிலம்புள கொண்ம்’ என்று நம்பிக்கை தந்ததோடு ‘கள்வன்’ என்று கருதிக் கணவரைக்கொன்ற பாண்டிய நெடுஞ்செழியனை எதிர்த்துக்குரல் கொடுக்கிறாள். இது ஆண்மையைப் போற்றிய பெண்ணின் எதிர்ப்புக் குரல். ஆனால் கம்பரின் காவியத்தில் வரும் சீதை அசோக வனத்தில் சிறை வைக்கப்பட்ட போது,

“எல்லை நீத்த உலகங்கள் யாவும் என்
சொல்லினால் சுடுவேன்; அது தூயவன்
வில்லின் ஆற்றற்கு மாசு என்று வீசினேன்”

என்பதில் சீதையிடம் இருந்த போர்க்குணமும், ஆண்மையைப் போற்றிய பெருமித உணர்வும் வெளிப்படுகின்றன. ஆனால் இராமனோ மீண்டு வந்த சீதையை ஒரு குற்றமற்றவளாகக் காட்டத் தீக்குளிக்கச் சொல்லும் போது பெண்மை அங்கே மறுபரிசீலனைக்குட்படுத்தப்படுகிறது.

கண்ணகி, சீதை ஆகியோரின் இச்செயல்களைப் புதுக்கவிதையாக்கிய கவிஞர் புவியரசு,

''சீதை மூழ்கிய தீயில் ராமன்
சந்தேகம் தகனம்
கண்ணகி மூட்டிய தீயில் அரசின்
கொடுங்கோன்மை தகனம்''

என்று மறுவார்ப்புச் செய்துள்ளார்.

**பாரதி - பாரதிதாசனில் பெண் :**

நாட்டு விடுதலையையும், சமுதாய விடுதலையையும் பாட வந்த பாரதியார்தான், ''ஆணும், பெண்ணும் சம உரிமை பெறக் கற்பை இருவருக்கும் பொதுவில் வைப்போம்'' என்னும் புதிய பண்பாட்டுக் குரலைச் சமுதாயத்தில் முன் வைத்தார். அத்தோடு பாரதியார் பெண்கள் சமுதாய வாழ்விலும், நாட்டு வாழ்விலும் சட்டங்கள், பட்டங்கள் பல பெற்றுப் பணிகள் பல ஏற்கும் புதுமைப் பெண்ணாக வரவேற்றுப் பாடியுள்ளார். இந்தக் கனவின் அடையாளங்களை நம்மிடையே சில இடங்களில் பார்த்தாலும் இன்னும் பெண்ணுரிமை நிறைவு பெறவில்லை. பெண்ணுக்கு விடுதலை இல்லையென்றால் உலக வாழ்க்கை இல்லை என்பதைச் சொல்லும் பாரதி,

''பெண்ணுக்கு விடுலை நீரிலை என்றால்
பின்னிந்த வுலகினிலே வாழ்க்கை இல்லை''

என்கிறார். இதைத்தான் ஷெல்லியும்,

''Can man be free if woman be a slave?''

என்பதில் பெண்ணை அடிமைப்படுத்திவிட்டு ஆண் உரிமை பெற முடியுமா? என்ற கேள்வியில் பாரதியார் உணர்வை வழிமொழிந்துள்ளார்.

பாரதி படைத்த பாஞ்சாலி சபதத்தில் பெண்ணடிமைத் தனத்தை எதிர்த்துப் பேசும் பாஞ்சாலி,

''...........................................என்ன
சாத்திரத் தாலெனைத் தோற்றிட்டார்?''

என்று எதிர்ப்புக்குரல் கொடுக்கிறாள். இறுதியில் பாஞ்சாலி,

''பாவிதுச் சாதனன் செந்நீர் - அந்தப்
பாழ்த்துரி யோதனன் ஆக்கை யிரத்தம்
மேவியிரண்டுங் கலந்து - குழல்
மீதினிற் பூசி நறுநெய் குளித்தே
சீவிக் குழல்முடிப் பேன்யான் ''

என்று வீரசபதத்தைப் பிரகடனப்படுத்துகின்றாள்

மக்களாட்சியையும், சமத்துவச் சமுதாயத் தேடலையும் முன்வைத்துப் பாடிய வால்ட்விட்மன் கூட,

'' The Female equally with the man I sing''

''I am the poet of the woman the same as the man
And I say it is as great to be a Woman as to be a man
And I say there is nothing greater than the mother of men''

என்னும் கவிதைகளில் பெண்ணுரிமையையும், தாய்மையின் பெருமையையும் பாடியுள்ளார்.

புதிய உலகம் படைக்க விரும்பிய புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் நாட்டில் பெண்ணடிமைத்தனம் இருக்கும் வரை நாட்டின் அடிமைத்தனம் போகாது என்பதை வலியுறுத்திக் கூறும்போது,

''பெண்ணடிமை தீருமட்டும் பேசுந் திருநாட்டு
மண்ணடிமை தீர்ந்து வருதல் முயற்கொம்பே ''

என்கிறார்.

பெண்விடுதலையே அவரின் கவிதைகளில் முகப்புரையாக அமைந்துள்ளது. இந்த நோக்கத்தில்தான் பாரதிதாசன் தம் படைப்புக்களில் பெண்மையை ஓங்கச் செய்தும், ஆண்மையை ஒதுங்கச் செய்துள்ளார். சம உரிமையான வாழ்வைத் தேடும் பெண்களாக வஞ்சி, அமுதவல்லி, வீரத்தாய், சுப்பம்மாள், அன்னம் முதலான பெண்மாந்தர்களைப் படைத்துக் காட்டியுள்ளார். பாரதியின் பாஞ்சாலி, கொடுமைக்காரர்களை எதிர்த்துப் போராட ஒரு வீர சபதம் எடுக்கிறாள்; ஆனால்

பாரதிதாசனின் தமிழச்சியாகிய சுப்பம்மாள் கையில் கத்தியை ஏந்திப் போராடுகிறாள்.

ஆண்-பெண் சமம் என்னும் மனிதத்தன்மையைக் காணும்போதுதான் வாழ்வும் முழுமை பெறமுடியும் என்பது ஷெல்லியின் கருத்தாகும் இக்கருத்தை 'இராணிமாப்' (Queen Mob) என்ற கவிதையில் ஆணும், பெண்ணும் இணைந்து சரிநிகராக நடைபோடுவதை,

"Woman and man is confidence and love
Equal and true and pure together trod
the Mountain - paths of of virtue"

என்று பாடியுள்ளார்,

## சிற்பியின் கவிதைகளில்.-

பரத்தமை என்பது சங்க காலந்தொட்டு இன்றுவரை இருந்து வரும் சமூகக் கொடுமையாக உள்ளது. பரத்தமை என்னும் மாறாத சாபத்தை மீட்டிப் பெண்ணின் உரிமையை, வாழ்வை நிலைநாட்ட விலைமகளிரைக் காதல் நாயகியாக ஏற்கும் ஆண்மையை 'மௌன மயக்கங்கள்' என்ற கதைக் கவிதையைப் படைத்துள்ளார். இக்கவிதையே பெண்ணின் மீட்பு என்றும் சொல்லலாம். இதைக் கவிஞர் சிற்பி, "தீர்வு அல்ல - தீர்வை நோக்கிய பயணம் இந்தக் காவியம்" என்று கூறியுள்ளார். இக்காவியத்தில் வரும் காவியத்தலைவன்(அவன்) விபசார விடுதியிலிருந்து மல்லிகாவை மீட்டி மணந்து பெண் விடுதலைக் கிளர்ச்சிகளில், உரிமைப் போர்க்களங்களில் ஈடுபட்டுப்போராடுகிறான். பெண்மையின் வாழ்விலும் ஏற்பினும் பண்பாட்டுத் தளத்திலும் ஒரு புதிய மாற்றத்தை முன்வைத்துள்ளார் கவிஞர் சிற்பி. இதற்குக் காரணமாகச் சமூக விடுதலை உணர்வு என்பதை மையமாக்கி,

"இப்போது எங்களுக்கு இல்லை
மௌன மயக்கங்கள்
ஏனெனில்

எங்களை இணைத்திருப்பது
சமூக விடுதலை இயக்கங்கள்''

என்று முடித்திருக்கிறார். இதில் பெண்ணுரிமையை நிலைநாட்டப் பெண்களும் ஆண்களும் இயக்கமாகச் செயல்பட வேண்டும் என்ற எதிர்பார்ப்பையும் சொல்லியுள்ளார். பெண்குலம் விடுதலை அடைய முடியாதபடி பரத்தைமையாக்கி மரித்துப்போக வைக்கும் சமூக சூழலைச் சாடும் சிற்பி,

''இனி மேலாவது
அவளைக்
கொஞ்சம் தூங்கவிடுங்கள்''

என்று பாடியுள்ளார். இந்த உணர்வுதான் கவிஞர் சிற்பியிடம் பரத்தமையை நீக்கிப் பெண்மையை மீட்கப் பாடிய 'மௌன மயக்கம்' என்ற கவிதைக் காவியமாகப் பரிணாமம் பெற்றுள்ளது.

## புவியரசு கவிதைகளில்....

பாரத நாட்டில் பெண்கொடுமை இன்னும் ஓயவில்லை என்பதைப் பாடியுள்ள கவிஞர் புவியரசு,

''பாண்டவச் சூதால் நிராகரிக்கப்பட்டு
துச்சாதனக் கருணையால். தவழப்பட்ட
பாஞ்சாலிகளின் கூலி உழைப்பு
மாளிகை தோறும் எங்கள் நாட்டில்....

சாவித்திரிப் போர்களால் உயிர் மீட்சி பெற்றும்
விசுவாமித்திரக் கடன்களால் விலை பேசப்படும்
அரிச்சந்திரர்களின் அடிமைச் சந்தைகள்
சேரிகள் தோறும் எங்கள் ஊர்களில்....

இந்திரக் காதலால் கைவிடப்பட்டு
கௌதம வறுமையால் சபிக்கப்பட்ட
அகலிகைகள் அக்னிப் பிரவேசம்

தினமும் எங்கள் தெருவில்...

இராம மோகங்களால் மறக்கப்பட்டு
இராவணக் காமங்களால் செதுக்கப்படும்
சீதைகளின் கல்படிமங்கள்
கணமும் எங்கள் வீடுகளில்...''

என்பதில் பெண்களின் நிலையைக் காட்சிப்படுத்தியுள்ளார். இக்குறியீட்டுக் கவிதையில் மாறிய சமூகச் சூழலிலும் கருணையால், கடனால், வறுமையால், காமத்தால் பெண்கள் இன்னும் அடிமைப்பட்டுத்தான் இருக்கிறார்கள் என்கிறார் கவிஞர் புவியரசு.

## அப்துல் ரகுமான் கவிதையில்....

கவிஞர் அப்துல் ரகுமான் பெண்மைக்கு முன்னால் ஆண்மை குற்றவாளிக் கூண்டில் பெண்ணடிமைப்படுத்திய போக்கை ஒரு ஒப்புதல் வாக்குமூலமாக கவிதையில் பதிவு செய்துள்ளார்.

'' பெண்ணே
அடிநாள் தொட்டு
உன்னை எரித்த நெருப்புக்களிலிருந்து
விசுவரூபமெடுத்து நிற்கிறாய் நீ
எங்கள் வெற்றிகளுக்குப் பின்னால்
நீ இருந்தாய்
உன் தோல்விகளுக்குப் பின்னால்
நாம் இருந்தோம்
இலக்கணங்களை உனக்கு வற்புறுத்தினோம்
நாம் வழு அமைதிகளாக இருந்தோம்
நீ உன்னை விற்றால் அது விபச்சாரம்
நாம் எங்களை விற்றால்
அது திருமணம் என்றோம்
இந்திரனாகி
உன்னைக் கற்பழிப்பவர்களும் நாம் தாம்
கௌதமனாகி
உன்னைச் சபிப்பவர்களும் நாம் தாம்

இதோ : உன் முன்னால் குற்ற உணர்ச்சியுடன்
தலைகுனிந்து நிற்கிறோம்
உன் பெண்மை என்ற
தெய்வீக நெருப்பில்
எங்களைப் பரிசுத்தப்படுத்துவாயாக !

என்பதில் ஆண்மை, பெண்மையைக் கொடுமைப்படுத்தியதை உணர்ந்து தம்மைப் பரிசுத்தப்படுத்த வேண்டுகிறது, இவ்வேண்டுதலில் பெண்ணுரிமையே கவிதையின் ஆதார சுருதியாக ஒலித்துக்கொண்டிருக்கிறது.

இப்படிப் பல புதுக்கவிதைகளில் பெண்ணின் உரிமை முன் வைக்கப்பட்டிருந்தாலும் கவிஞர் புவியரசு கூறுவது போல் பெண் விடுதலை இன்னும் முழுமை பெறவில்லை. மக்களாட்சியின் மரபும், உரிமையும் அதிக அளவில் பேசப்படும் இந்நாளில்தான் விளம்பரங்களிலும், திரைப் படங்களிலும் பெண்களை ஒரு நுகர்வுப் பொருளாகக் காட்டி வருகின்ற அவலநிலை ஒரு பக்கம் நிலவி வருகிறது. பெண் இயக்கங்கள் இன்னும் கூர்மையடைந்து, பூங் கொடிகள் போர்க்கொடிகளாக மாற வேண்டும். உள்ளாட்சித் தேர்தல்களில் பெண்கள் பொறுப்பேற்ற சமூகச் சூழலும், ஆட்சிப் பொறுப்பில் பெண்களுக்கு மூன்றில் ஒரு பங்கு இடம் பெற வேண்டும் என்பதும் நல்ல அடையாளங்கள்.இந்த அடையாளங்களுக்கு மத்தியில் பெண்கள் அதிக அளவில் பொது வாழ்க்கைக்கும், அரசியல் கட்சிகளின் தலைமைக்கும் முன்வர வேண்டும். பெண்கள் பொது வாழ்வில் ஒதுங்காமல் பாரதி, பாரதிதாசன், புதுக்கவிஞர்கள் கண்ட எதிர்பார்ப்பில் தலைமையேற்க முன்வரவேண்டும். அப்போதுதான் அரசியல் ஆதிக்கமும், ஆண் ஆதிக்க சக்திகளும் வழிவிட்டு ஒதுங்கும். ஆண் எழுத்தாளர்களும், பெண் எழுத்தாளர்களும் பெண்ணுரிமையை அதிக அளவில், சரியான போர்க்குணத்தில் படைக்கும் போதுதான் பெண் சிசுக் கொலை, முதிர் கன்னிக் கொடுமைகள் நீங்கிப் பெண்ணுரிமை பெற்ற புதிய சமுதாயத்தை உருவாக்க முடியும்.

சக்தி = ஜடம் × ஒளிவேகம்²

(E = MC²)

''அணுக்கள் குவிந்த
ஜடப்பொருள் யாவும்
சக்தியின் சலனம்
ஒளியின் கதியை
ஒளியின் கதி யால்
ஒளியின்கதி யால்
பெருக்கிய வேகம்
ஜடத்தைப் புணர்ந்தால்
ஜடமே சக்தி''

— தருமு சிவராம்

# 11. அறிவியல்

இலக்கியக்கலை மனிதப் பண்பாட்டின். சமுதாய வளர்ச்சியால் உருவான மானுடக்கலை, இக்கலை நாட்டையும். மனிதனையும் காலத் தேவைக்கேற்ப வழி நடத்தும் வல்லமை கொண்டது. சமுதாய வளர்ச்சிக்கும்,

வாழ்வுக்கும் உருவானதுதான் இலக்கியமும், அறிவியலு மாகும். இலக்கியம் ஒரு தனித்துறையாகவும், அறிவியல் ஒரு தனித்துறையாகவும் விளங்கினாலும் அவ்விரண்டின் அடிப்படை நோக்கம் மனிதவாழ்வை மேம்படுத்துவதாகும். இலக்கியத்தால் மனித மாண்புகள் நிலைப்படவும், அறியலால் வாழ்வின் நோக்குநிலை விரிவடையவும், காலந்தோறும் பயன்பட்டு வந்துள்ளன. அறிவியலுக்கு ஆக்கவும் தெரியும்; அழிக்கவும் முடியும். ஆனால் இலக்கியம் வாழ்வின் ஆக்கத்தைத்தான் செய்யமுடியும், இன்றைய மனித வாழ்வுக்கு இலக்கியமும்; அறிவியலும் தேவைப் படுகின்றன. தமிழில் தோன்றிய புதுக் கவிதைகள் அறிவியல் உண்மைகளையும், கண்டுபிடிப்புக்களையும் பாடு பொருளாக்கி வாழ்வின் நோக்கையும், போக்கையும் வெளிப்படுத்தியுள்ளன. இக்கட்டுரையில் புதுக்கவிதைகளின் படைப்புமுறைகளில் பயன்படுத்தியுள்ள அறிவியல் நோக்கு ஆராயப்பட்டுள்ளது,

மேலைநாட்டுக் கவிஞர் ஷெல்லி மேகத்தைப் பாடும் போது,

**" நான்**
**மண்ணுக்கும் நீருக்கும் மகள்**
**வானத்தின்**
**செவிலித்தாயால் வளர்க்கப்படும்**
**குழந்தை.**
**நான்**
**ஆழமான கடலையும்**
**பரந்த கடற்கரைகளையும்**
**கடந்து செல்லும் போது**
**மாற்றமடைவேன் - ஆனால்**
**அழிவதில்லை.**

(மொழிபெயர்ப்பு : சுபாசு)

என்று பாடியுள்ளார். இதில் ஷெல்லி மேகத்தைப் பாடி னாலும் ஆற்றல் அழிவதில்லை என்ற அறிவியல்

உண்மையை எடுத்துக்காட்டியுள்ளார் டாக்டர். ப. க. பொன்னுசாமி.

இதேபோல் தமிழ்க் கவிதைக்குப் புதியமுகவரி படைத்த பாரதியின் வசன கவிதைகளில் அறிவியல் நோக்கு காணப்படுகிறது. பாரதி, சக்தியைப் பாடும்போது,

''வடிவம் மாறினும் சக்தி மாறுவதில்லை.
எங்கும் எதனிலும் எப்போதும் எல்லாவிதத்
தொழில்களும்
காட்டுவது சக்தி''

என்று பாடியுள்ளார். ஷெல்லி ஆற்றலைப் பாடியது போலவே பாரதி சக்தியின் தன்மையை அறிவியல் நோக்கில் பாடியிருக்கிறார் பாரதி பாடிய ஞாயிறு, காற்று, கடல் போன்ற கவிதைகளிலும் அறிவியல் சிந்தனைகள் காணப் படுகின்றன, இவை போன்ற கவிதைகளிலும் அறிவியல் சிந்தனைகள் காணப்படுகின்றன. இவை போன்ற அறிவியல் நோக்குநிலைகள் புதுக்கவிதைகளுக்குள்ளும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

கவிஞர் சி. மணி 'ஒளிச்சேர்க்கை' என்ற தலைப்பிலேயே கவிதைத் தொகுதியை வெளியிட்டுள்ளார். இதில் 'ஒளிச்சேர்க்கை' என்ற தலைப்பில்,

''சூரிய ஒளியில்
''கூந்தலும் சீப்பும் கொண்டு
வானவில் படைப்பாள்''

என்று வானவில் தோற்றத்தைக் குறிப்பிட்டுள்ளார். பூக்களிலிருந்து மகரந்தத்தை வண்டுகள் எடுத்துச்சென்று இன்னொரு பூவின் மகரந்தத்தோடு கலக்கும் போது சூலாகும் என்பது அறிவியல். ஆனால் இந்த அறிவியல் உணர்வு பெற்ற அப்துல்ரகுமான்.

'' வண்டுகளே சூலாக்கும்
மகரந்தம்
என் பூக்களில்
இவைகளை

அர்ச்சனைக்காகப்
பறித்து விடாதீர்கள்''

என்று கவிதைப்பூவின் மகத்துவத்தைக் குறிப்படுத்தியுள்ளார்.

ஆண்-பெண் பேதமற்ற சமத்துவமான சமூகத்தேடலில் அப்துல்ரகுமான் 'ஒப்பில்லாத சமுதாயம்' என்ற தலைப்பில்,

''தாலிக்கயிறு ஒரு
ஆயுள் தண்டனையின்
கழுத்து விலங்காகாது!
திரவப் பெண்மைக்கு
திடப்பொருள் கிண்ணமாய்
ஆண்மை இருக்குமங்கே''

என்று குறிப்பிடுகிறார். பெண்மையைத் திரவமாகப் பாடியிருப்பதால், பெண், எதிர்க்க வேண்டியதை எதிர்த்தும். ஏற்க வேண்டியதை ஏற்றும், மாற்ற வேண்டியதை மாற்றியும் வாழ வேண்டிய ஆற்றலைப் புலப்படுத்தியுள்ளார் ரகுமான்.

காதலியின் மனத்தோடு கலந்த காதலனின் மனவுணர்வைச் சொல்ல வந்த கவிஞர் அப்துல்ரகுமான் 'வேதியல்' என்ற தலைப்பில்

''என்னைப் போல் நான் இருக்க நினைத்தேன்
ஏதோ வேதியல்' செய்துவிட்டாய்''

என்கிறார். இதில், வேதியல் வினைநிகழ்வுபோல காதலனுக்குள் ஏற்பட்ட மனமாற்றத்தை அறிவியல் நோக்கில் வெளிப்படுத்தியுள்ளார்.

வியட்நாமியரின் அறிவியல் விவேகத்தைச் சொல்ல வந்த கவிஞர் மீரா,

வியட்நாம் யுத்தம்
ஏன் நின்றது?

அமெரிக்கப்படை
வீசிய
நாப்பாம்
குண்டில்
இருந்த பித்தளையைப்
பெயர்த்தெடுத்தே
ஆயுதம் செய்து
விரட்டி அடித்தனர்
விடுதலை வீரர்
வியட்நாமியர் ''

என்பது அறிவியலின் கனத்தைக் காட்டுகிறது. உயிர் ஈர்ப்புச் சக்தியாகிய சாதலியை அடையானங்கண்ட காதலனின் மனமகிழ்ச்சியைக் கூற வந்த மீரா.

''நியூட்டன்
புவியீர்ப்புச் சக்தியைக்
கண்டுபிடித்தான்
நான்
என் உயிர் ஈர்ப்புச் சக்தியைக்
கண்டுபிடித்தேன் ''

என்று அறிவியலின் கண்டுபிடிப்பைக் காதலியின் தேடலுக்கு இயைபுபடுத்திக் காட்டியுள்ளார்.

கவிஞர் சிற்பியின் கவிதைப் படைப்புகளில் அறிவியல் நோக்கு மிகுதியாக மையங் கொண்டுள்ளது. அணுச் சோதனைகளின் விரிவாக்கம் மானுடத்தை அழித்துவிடும் கவலையைப் பாடும்போது,

'' விரிகிறது இன்னும்
விரிகிறது இன்னும்
ராட்சத நாய்க்குடையைக்
காளான்...!
சூரியக்காரரே ! விஞ்ஞான தீபத்தில்
மாணிக்கத்தாலியை எரிக்கும் மூடரே!

ஆத்திரம் எங்களைப் பைத்தியம் ஆக்குமுன்
எங்கள் பாப்பாக்கள் நீலமாய்ப் பிறக்குமுன்
புல்லிதழில் விஷ முத்துக்கள் வியர்க்குமுன்
செல்வப் பசு மடியில் மரணம் சுரக்குமுன்
அரும்பு உதடுபிரிக்கும் பச்சை மண்முற்றத்தில்
கரிக்கோலமிடும் அணுக்குண்டர்களே!

விரிவது நிற்கட்டும்
விரிவது நிற்கட்டும்
ராட்சத
நாய்க்குடைக்
காளான்...............—

என்று வேதனையோடு வெளிப்படுத்தியுள்ளார். அணு ஆயுதத்தால் ஏற்படும் மானுடச் சிதைவை உலகளாவிய மானுட நோக்கில் போர் வெறியர்களுக்கு ஒரு எச்சரிக்கைக் குரலாக இக்கவிதை அமைந்துள்ளது. இதில் கவிஞர் சிற்பி அறிவியலின் குறிக்கோள் சிதைகின்ற போது ஏற்படும் மானுட அழிவுகளை அடையாளங்காட்டியுள்ளார்.

'காலம்' என்னும் கவிதையில்,

"விசுவ வெளிப்பாழின்
மர்மக் கருப்பையில்
நானும் காலமும்
ஒளிந்திருந்தோம்
நட்சத்திரப் புழுதி அணுக்களாய்..." என்றும்
"அணுக்களின் பிள்ளை நான்
ஆனதால புவியின்
எந்தச் சேதமும்
என்னை அழவைக்கின்றன
எந்த உவகையும்
என்னைத்துள்ளி எழவைக்கின்றன."

என்றும் காலப் பரிணாமத்தை விளக்கியுள்ளார். இதில் கவிஞர் சிற்பி காலம் என்ற கோட்பாட்டையும், மூலக்கூறு

களிலிருந்து மனிதன் புறப்பட்ட பயணத்தையும் அறிவியலால் அர்த்தப்படுத்தியுள்ளார்.

மனிதன் அசலாகயில்லாமல் பலமாதிரிகளாக இருக்கிறான் என்பதை உணர்த்த விரும்பும் கவிஞர் அப்துல்ரகுமான்,

" சமூகத்திற்குத் தேவை
ஜெராக்ஸ் பிரதிகள்
ஏனெனில்
பிரதிகள் தொந்தரவாய்
இருப்பதில்லை
வழக்கமானதைக் குலைப்பதில்லை "

என்கிறார், இதில் அறிவியலின் தேடலில் கிடைத்த ஜெராக்ஸ் பிரதிகளை மனித மாதிரிகளுக்குக் குறிப்படுத்தியுள்ளார் ரகுமான். இது ஒரு அறிவியல் குறியீடாகும்.

இன்றைய உலகில் 'மனிதம்' என்பது மாறிப்போய் வரும் சூழலை அடையாளப்படுத்த விரும்பிய கவிஞர் அப்துல்ரகுமான், கிளி, மாடு, யானை ஆகியவற்றின் கள்ளங் கபடமற்ற நல்ல குணத்தை மனிதன் கற்றுக்கொள்ளாமல் கபடவாதியாகப் போனான் என்கிறார். அதனால் மாறிப்போன மனித வாழ்வைப் பார்த்துக் கண்ணீர் வடிக்கும் கவிஞர்:

" என் மனம் அழுதது
பறவைகளின் சுதந்திரத்தை
விலங்குகளின் கள்ளங்கபடற்ற தன்மையை
மனிதன் கற்றுக் கொண்டிருக்கலாம்.
இந்த உலகம்
அழகாக இருந்திருக்கும்
ஆனால் அவனோ
பறவைகளுக்கும்
விலங்குகளுக்கும்

மனித புத்தியைக்
கற்றுக் கொடுத்துவிட்டான்
விலங்கிலிருந்து
மனிதனானது
பாரிணம 'வளச்சி' தானா?''

என்று அங்கதத்தொனியில் அறிவியல் நோக்கில் கேள்வியை எழுப்பி நம்மைச் சிந்திக்க வைத்துள்ளார்.

அறிவியல் கண்டுபிடிப்புகளால் கண்டறிந்த தொலைக் காட்சிப் பெட்டி, மாவு ஆட்டும் இயந்திரம் ஆகியவற்றை ஏற்றுக்கொள்கிறான் அறிவியல் யுக மனிதன். ஆனால் மனித உறவுகளிலும், வாழ்க்கையின் ஏற்பிலும் பெண்ணை மட்டும் மறுக்கும் மனிதப் போக்கை அடையாளப்படுத்த

''தொலைக்காட்சிப் பெட்டி
நடிகைபோல் நுழைந்தது
எல்லோர் முகங்களிலும்
திரைப்படம் ஓடியது.

மாவு ஆட்டும் இயந்திரம்
வந்து அமர்ந்த அன்று
மனைவி
பம்பரமாய்ச் சுற்றினாள்.

ஒருநாள்
வீட்டிற்குள் பூத்தது
பூ வொன்று!
பெண் பூ என உச்சரிக்கப்பட்டது.

மின்சாரம் நின்று போன
காற்றாடியாய்
வீடு சுருங்கிச் சமாதியானது''

என்கிறார் கவிஞர் பஞ்சு. அறிவியல் வரவுகளின் பயனை ஏற்கும் பெண்மை, பெண் குழந்தையை வெறுக்கும் பேதமைக் குணத்தைச் சாடியிருக்கிறார்.

கவிஞர் சிதம்பரநாதன் அறிவியல் கண்ட போர்க் கருவிகளோடு பாரதியை ஒப்பிடும்போது.

**பாரதி**
**யுத்த தளவாடக்**
**கவிதைகள் தாங்கிவந்த**
**போர்க்கப்பல்**
**" கற்பனை விமானத்திலிருந்து**
**தேசபக்திப் பாரசூட்டில்**
**தெருவில் இறங்கியவன் "**

என்று இயைபுபடுத்திப் பாரதியின் கவிதைக் குணங்களை யும் குறிப்படுத்தியுள்ளார்.

பழைய கோட்பாடுகளால் பேதப்பட்டுக் கிடக்கும் சமுதாயத்தை மாற்றி அமைக்க காரல் மார்க்ஸை வரவேற்றுப் பாடும் கவிஞர் சிதம்பரநாதன்,

**" அத்வைத மூலிகைகளால் கூட**
**குணப்படுத்த முடியாத**
**ராஜ பிளவைகளுக்கு**
**ரண சிகிச்சையைச்**
**சிபாரிசு செய்த நிபுணன்**
**புதிய மார்க்கம் காட்டிய**
**தீர்க்கதரசி**
**காரல் மார்க்ஸ்**
**தேசங்களுக்கல்ல**
**திசைகளுக்குத்தலைவன் "**

என்று பாடியுள்ளார். இதில் நோய் முற்றாக நீக்கப் பயன்படுத்தும் நவீன மருத்துவ முறையாகிய 'ரண சிகிச்சை'யைக் குறிப்பிட்டிருப்பது மார்க்ஸின் புரட்சி அடிப்படையில் புதிய சமூகத் தேடலாகும்,

புதுக்கவிதைகளில் அறிவியல் நோக்கு என்பது இன் னும் பலவகைகளில் விரிவாக ஆராய வேண்டிய புதிய களமாகும். ●

## இந்நாலுக்குப் பயன்பட்ட நூல்கள்

### 1. புதுக்கவிதைகள்


1 அப்துல் ரகுமான், நேயர் விருப்பம், அன்னம் வெளியீடு. சிவகங்கை, பதிப்பு-1984.

2 அப்துல் ரகுமான் ஆலாபனை, கவிக்கோ பதிப்பகம், சென்னை, பதிப்பு:1995.

3 அப்துல் ரகுமான், பால்வீதி செல்மா வெளியீடு, சிவகங்கை: பதிப்பு:1990,

4 அபி, அந்த நடை, அன்னம் வெளியீடு சிவகங்கை, பதிப்பு:1979.

5 இன்குலாப் கவிதைகள், அகரம் வெளியீடு, சிவகங்கை, பதிப்பு:1981.

6 இன்குலாப், வெள்ளை இருட்டு. அன்னம் வெளியீடு, சிவகங்கை, பதிப்பு;1977.

7 கந்தர்வன், சிறைகள், அன்னம் வெளியீடு, சிவகங்கை, பதிப்பு:1989.

8 கந்தர்வன், கிழிசல்கள், அகரம் வெளியீடு, சிவகங்கை. பதிப்பு:1981.

9 கல்யாண்ஜி, புலரி, அன்னம் வெளியீடு, சிவகங்கை பதிப்பு:1981.

10 காமராசன், நா. கறுப்பு மலர்கள், பாவை பதிப்பகம், சென்னை பதிப்பு:1971

11 கௌதமன், எழுபது கோடியில் இவனும் ஒருவன் கலைஞன் வெளியீடு, சென்னை, பதிப்பு-1983

12 சக்திக்கனல், கனகாம்பரமும் டிசம்பர் பூக்களும். அன்னம் வெளியீடு சிவகங்கை, பதிப்பு:1976

13 சிற்பி சர்ப்பயாகம், அன்னம் வெளியீடு, சிவகங்கை, பதிப்பு:1983.

14 சிற்பி சூரிய நிழல், கோலம் வெளியீடு, பொள்ளாச்சி, பதிப்பு 1995.

15 சிற்பி, மௌன மயக்கம், அன்னம் வெளியீடு சிவகங்கை, பதிப்பு:1988.

16 சிதம்பர நாதன், அரண்மனைத் திராட்சைகள், அன்னம் வெளியீடு, சிவகங்கை, பதிப்பு;1982,

17 சுப்பையன்.ஏ, தெ. அறைகூவல், சிகரம் வெளியீடு, சென்னை, பதிப்பு:1980.

18 சுபாசு. விடியல், சுபாலிகா பதிப்பகம், திருச்சி, பதிப்பு, 1991.

19 க. நா. சு. கவிதைகள், ஞானச்சேரி வெளியீடு, சென்னை, பதிப்பு:1989.

20 செல்லப்பா. சி. சு. புதுக்குரல்கள், எழுத்து பிரசுரம், சென்னை. பதிப்பு:1974.

21 ஞானக்கூத்தன், அன்று வேறு கிழமை, அகரம் வெளியீடு. சிவகங்கை, பதிப்பு:1980

22 தமிழன்பன், தோணி வருகிறது, மணிவாசகர் நூலகம், சிதம்பரம்: பதிப்பு-1973.

23 தமிழன்பன், அந்த நந்தனை எரித்த தீயின் மிச்சம், பூம்புகார் பிரசுரம் சென்னை, பதிப்பு:1982

24 தமிழன்பன் , நாமிருக்கும் நாடு, பாப்லோ பாரதி பதிப்பகம், சென்னை, பதிப்பு;1989

25 தமிழன்பன், ஊமை வெயில், அன்னம் வெளியீடு சிவகங்கை, பதிப்பு 1964

26 தருமு சிவராம், கைப்பிடியளவு கடல், மணி பதிப்பகம், இராஜபாளையம், பதிப்பு:1976

27 துரைப்பாண்டியன், நீரைத் தேடும் வேர்கள், அன்னம் வெளியீடு, சிவகங்கை, பதிப்பு:1987

28 நகுலன், மூன்று, புக்வென்சர் வெளியீடு, சென்னை பதிப்பு:1979

29 பஞ்சு, நூற்றாண்டுக் கவலைகள். அன்னம் வெளியீடு சிவகங்கை, பதிப்பு:1970

30 பஞ்சு, ஒட்டுப்புல், அகரம் வெளியீடு, சிவகங்கை, பதிப்பு 1977

31 பசுவய்யா, 107 கவிதைகள், காலச்சுவடு பதிப்பகம், நாகர் கோயில், பதிப்பு:1996.

32 பரிணாமன், ஆகஸ்டும் அக்டோபரும் என். சி. பி. எச். சென்னை, பதிப்பு:1974.

33 பாலா, இன்னொரு மனிதன், அன்னம் வெளியீடு, சிவகங்கை, பதிப்பு:1991.

34 பிச்சமூர்த்தி. ந. கவிதைகள், க்ரியா பதிப்பகம், சென்னை, பதிப்பு:1985.

35 புவியரசு, இதுதான், அன்னம் வெளியீடு, சிவகங்கை, பதிப்பு:1975.

36 மணி, சி. ஒளிச் சேர்க்கை, சாரல் வெளியீடு. சேலம், பதிப்பு:1976

37 மீரா. கனவுகள்+கற்பனைகள்=காகிதங்கள், அகரம் வெளியீடு, சிவகங்கை, பதிப்பு;1987.

38 மீரா, ஊசிகள்; மீனாட்சி புத்தக நிலையம், மதுரை பதிப்பு:1984.

39 முருகு சுந்தரம், தீர்த்த கரையினிலே, அன்னம் வெளியீடு சிவகங்கை, பதிப்பு:1983

40 மேத்தா. மு., ஒரு வானம் இரு சிறகு. திருமகள் நிலையம், சென்னை, பதிப்பு:1988.

41 மேத்தா. மு. வெளிச்சம் வைளியே இல்லை, நர்மதா பதிப்பகம், சென்னை, பதிப்பு 1981.

42 மேத்தா. மு., கண்ணீர்ப் பூக்கள், வானம்பாடி வெளியீடு, கோவை, பதிப்பு:1974.

43 மேத்தா. மு., அவர்கள் வருகிறார்கள், விஜயா பதிப்பகம், கோவை, பதிப்பு:1988

44 மோகன். இரா. (பதி), புதுக்கவிதை அணி வகுப்பு, மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1985

45 வேலுச்சாமி, இரா, குருஷேத்திரம், சிலம்பா பதிப்பகம், சென்னை, பதிப்பு:1981.

46 வைரமுத்து, இரா. இரத்ததானம், கலைஞன் பதிப்பகம், சென்னை, பதிப்பு-1981.

## 2, பிற நூல்கள்

1 அப்துல் ரகுமான், புதுக்கவிதையில் குறியீடு, செல்மா வெளியீடு, சிவகங்கை, பதிப்பு:1990,

2 அப்துல் ரகுமான். முட்டை வாசிகன், கவிக்கோ பதிப்பகம், சென்னை, பதிப்பு:1995

3 அப்துல் ரகுமான், அவளுக்கு நிலா என்று பெயர், கவிக்கோ பதிப்பகம், சென்னை, பதிப்பு: 1995

4 அன்னம் ஆண்டு மலர், சிவகங்கை, பதிப்பு:1976

5 இலக்கு கட்டுரைகள்,புதுக்கவிதையும் புதுப்பிரக்ஞையும், காவ்யா, பெங்களூர், பதிப்பு:1985

6 கம்பர், கம்பராமாயணம், கம்பன் கழகம், சென்னை, பதிப்பு:1984.

8 கனகசபாபதி, சி. பாரதியும் பிறரும் பிச்சமூர்த்தியும் பிறகும், செல்மா வெளியீடு, சிவகங்கை, பதிப்பு:1990.

9 வானம்பாடிகளுக்குப்பின் தமிழ்க்கவிதை, சுப்ரபாரதி மணியன்,அகரம் வெளியீடு சிவகங்கை,பதிப்பு:1982

10 செல்லப்பன், கா, விடுதலைச் சிட்டும் புரட்சிக்குயிலும் என், சி. பி. எச், சென்னை. பதிப்பு:1973

11 சேவற்கொடியோன் சே. இரத்தத்தில் கரைந்த சத்தியங்கள், சூரியன் பதிப்பகம், சென்னை ,பதிப்பு:1989

12 தொல்காப்பியர்,தொல்காப்பியம், பொருள்,செய்யுளியல் கழக வெளியீடு, சென்னை, பதிப்பு:1965

13 பாரதியார் கவிதைகள், வானவில் பிரசுரம், சென்னை, பதிப்பு:1987

14 பாரதியார் கவிதைகள், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, பதிப்பு:1994

15 பாலா, புதுக்கவிதை ஒரு புதுப் பார்வை, அகரம் வெளியீடு, சிவகங்கை, பதிப்பு-1983,

16 பாலா, கவிதைப் பக்கம், மீரா பதிப்பகம், புதுக்கோட்டை, பதிப்பு:1983

17 மீரா, எதிர்காலத் தமிழ்க்கவிதை, அன்னம் வெளியீடு. சிவகங்கை, பதிப்பு:1965

18 முருகு சுந்தரம், புகழ்பெற்ற புதுக்கவிஞர்கள், அன்னம் வெளியீடு, சிவகங்கை, பதிப்பு:1993

—○—



இந்நூலாசிரியர் முனைவர் பெ.சுபாசு சந்திரபோசு (சுபாசு) கற்றல், கற்பித்தல்; உழைத்தல் உழைப்பித்தல்; ஆய்தல், ஆய்வு செய்வித்தல் என்ற புதிய அறுதொழிலாளர். புதிய புதிய துறைகளை நோக்கி அறிவு வெளிச்சத்தைப் பாய்ச்சுவதிலும் கற்பவனே சாகாத ஆசிரியன். உயர்நிலைப்பட்டமான முனவைர் பட்டத்தைப் பெற்ற பிறகும், இதழியல், மக்கள் தொடர்பியல் போன்றவற்றை ஆழக்கற்று அவற்றிலும் பட்டங்கள் பெற்றவர். அறிவு எந்தத் திசையிலிருந்து வந்தாலும் சொந்தமாக்கிக் கொள்ளும் தணியாத வேட்கை உடையவர்.

படிப்பு இவர் மூச்சு; எழுத்து இவர் இயக்கம்; ஆய்வுத்தேடல் இவர் நோக்கம். அவ்வப்போது இவர் கூவத் தெரிந்த குயிலும் ஆவார். **'விடியல்'** என்னும் தொகுப்பின் மூலம் தன்னைக் கவிஞனாக நிலைப்படுத்திக் கொண்ட சிறப்பும் இவருக்கு உண்டு. பாவேந்தரிடத்து இவர் கொண்ட ஈடுபாடு **'பாரதிதாசனும் தமிழியமும்'** என்ற பயன்மிக்கதொரு நூலாக வெளிவந்திருக்கிறது.

தமிழுக்குப் புதிய வரவான **'கட்டுரை இலக்கியம்'** பற்றி ஆய்வு செய்தவர் இவர்; இப்போது மற்றுமொரு புதிய துறையான புதுக்கவிதை பற்றி நூல் எழுதியுள்ளார். **'எது புதுக்கவிதை ?'** என்பது நூலின் தலைப்பு. புதுக்கவிதையின் படைப்பு முறைகள், சமுதாய நோக்குநிலைகள் ஆகிய இரண்டு களங்களில் நின்று புதுக்கவிதை பற்றி இந்நூலில் விளக்கிப் பேசுகிறார் இவர். இந்த நூல் புதுக்கவிதைத் தொடர்பான பல ஐயங்களை நீக்கும்; புதுக்கவிதைக்கு ஒரு கொடையாக நிற்கும்; நிலைக்கும்.

*திவ்வியப் பிரபந்தச் செல்வர்*

*முனைவர் ம.பெ. சீனிவாசன்*